very few of Asiriyappahs. In Tiruvasagam, even the number of Venbas are very few. Thus the standard forms of Tamil classical poetry did not find much favour with our Saints of middle ages. Whereas Viruttam metre in any form, was short and sweet and hence their preference. For instance the author of Nalavenba made his art perfect with Venbas only; but Naidatham, in spite of its defect, found greater popularity and exhibits various levels in music, whereas Pugazhendi from the musical point of view is only monotonous. None but a pedant now-a-days attempts to compose a Kalippa or a Vanjippa, and the Virutham in some form or other is within the easy reach of any modern poet. Therefore it is now incumbent on any modern poet to know what are the forms of Viruttams that are sanctioned by usage in modern Tamil. Like Ramalinga Swamigal, we cannot discard the rules of prosody and sing poems which will be pleasant in the musical aspect of Tamil, and expose ourselves to the criticism of contemporary literary critics for carelessness in prosody.

The students of our literature may again ask why all the models given by our Saivaite and Vaishnavite saints were not all copied by their successors in the poetic art. For instance we have the Pan known as Sikamaram (சீகாமரம் பண்) which cannot be reduced to any definite formula of Tamil prosody*. Even in the matter of other *Pans*, the musical formulas which were plainly known even to ordinary people in the days of our saints, were forgotten by lapse of time and want of proper records. So much so, that when we come to the period of Nambiyandar Nambigal, the compiler of Saivaite scriptures, it was a great problem to find out the *Pan* of each poem, and the marking of *Pan*, depended upon the hearsay of a practically illiterate woman. Thus, only such of the poems whose prosody was easily evident on their face, were adopted by the people of the days of Nambiyandar Nambigal and thereafter.

Hence we find Kambar and his contemporaries, whose works belong to the succeeding period, confining themselves only to a limited number of models, and Kamban's Sandams

* There are two chapters in this *Pan* in Appar's Devaram.

were only ninety-six in number all of which are incorporated in the rules contained in Viruttappaviyal. It was a vain boast for Beschey that in *Tembavani* he exceeded Kamban in his number of Sandams. For wherever, he imitated the models of Kamban, there is no flaw in his poetry, but in other poems wherein he either copied the obsolete models or invented according to his whims and fancies, he failed to make viruttams. Excepting the models set out in Viruttappaviyal, there is hardly any poem which can be called Viruttam. You may pile six same seers in every line of your poem, but you cannot call it a Viruttam. The same remark applied to those of five, or seven feet. Had Beschey realised this, his work would have been a perfect monument in our literature.

Now, whether we like or not, the prosody of Viruttam has been in a way crystalised and it is almost impossible to melt it for pouring into new moulds. Hence as it is, we have to assert, in the absence of a better work, that Viruttappaviyal represents almost perfectly the prosody of modern Tamil Viruttams.

## Author's Preface in Viruthappaviyal.

It is a matter of surprise, unless it is supposed to be due to the general deficiency of Tamil Literature, why the excellent writers on Tamil Prosody are perfectly silent upon the subject of Tamil Viruthams and left them as is now believed entirely to the acute and trained ear of the poet. It cannot be for a moment maintained that Viruttams form an unimportant part of the Tamil Metre. The great epics, Ramayanam and Bharatham, all the Puranams, such historical poems as Chinthamani and Naidhatham, theological treatises such as Thevaram, Thiruvasagam and Thayumanavar and innumerable other works of greater or less importance are almost wholly written in Viruthams. When a Pandit at the present day has an occasion to compose for any particular purpose, his choice generally falls upon some kind of Viruttam. Nor can it be supposed that the cause is due to their easy character, though, Tamil poets have, with an astonishing facility, composed thousands of these different kinds of verses without, it is to be presumed, any knowledge of their rules. Are there not numerous treatises in Sanskrit on Viruthams, notwithstanding that Sanskrit Pandits are able to compose them without the least recollection or the aid of their rules ? Is not the Venba, exhaustively described in Tamil works on Prosody though it is a well-known fact that it is correctly composed by man having no knowledge of Tamil grammar and much less of Tamil Prosody.

Serious consequences have resulted from a want of classification and description of these metres. Blunders are very common with editors in general who have no other alternative in arranging the verses than a bare appeal to the ear which

though profoundly conversant with Viruttams is with some liable to err. Even poets have occasionally made slight deviations from the theory which have, however, to be provided for and reconciled under rules in the exceptional chapter.

Viruttams are here divided into two classes, the first comprising those that are peculiar to Tamil and the second those that are common to Tamil and Sanskrit. The first class calls for no remarks except that they are not very numerous but are in perfect harmony with the elementary principles of Tamil Prosody. But the syllables and feet of Tamil Prosody cannot adequately describe the Chandha metre which is solely based upon distinctions not recognised in the elements of Tamil Prosody. Syllables and feet ending in short vowels are not distinguished from those ending in long vowels but have simply a common name to designate them both. But these distinctions are of the utmost importance in describing the chandha verses. Although, therefore, a new set of syllables and feet would be very convenient in describing the second class, yet it has been thought prudent to adhere to the old formulae though at the sacrifice of much convenience and conciseness.

It would be a very interesting question to decide whether the chandha stanzas obtaining in Tamil have been borrowed from Sanskrit, or are of an indigenous growth though coinciding with Sanskrit Prosody. Arguments are not wanting to support either view of the question. But whatever may be the truth or the conclusions which may be arrived at, on a perusal and comparison of the different kinds of chandhas here described, no serious objection, it is believed, will be

taken to giving Tamil Chandha Viruttams, names borrowed from Sanskrit, wherever similarities exist. There are many chandha stanzas quite common with Tamil poets which though contemplated in the theory are yet not described and named by Sanskrit writers. Such verses are here also left unnamed.

As the verses in this book which lay down the rules are themselves so framed and afford illustrations of those rules, it has been deemed unnecessary to swell the volume of the book with illustrations from standard authors.*

If, in consequence of the facilities afforded by the rules laid down in this book in the composition of viruthams, a large number of literary metrical productions, either original or containing translations of Sanskrit poems are undertaken even by Tamil scholars of average abilities, the author would consider himself amply rewarded for his labours.

---

[*Although no illustration was given by the author under the rules which he formulated, the Editor has added illustrations in this edition for the convenience of the readers, and for their better understanding of the rules.]

# விருத்தப்பாவியல்

## நூலாசிரியர் அவையடக்கம்

1. கற்று ணர்ந்தக வீசர்த மக்கெனச்
சொற்ற தோமில வையடக் கப்பணி
சற்று நூற்பொரு டன்மையு ணர்ந்திலேற்
கற்ற வற்கர சன்முடி யாகுமால்.

2. சிற்று யிர்க்குறு திப்பொரு டேர்ந்துரை
நற்ற வப்பய னாகிய நாவலர்
கற்றி லேமென் றடங்கிக் கழறினு
லற்று நானும றைத லடுக்குமோ.

3. செஞ்சொ னன்னயத் தீங்கடன் மேய்ந்துவான்
மஞ்செ னப்பொழி வான்றமிழ் வல்லபே
ரஞ்ச னக்கிரி முன்னர றிவிலாப்
பஞ்சி னேனென் றுணர்ந்தும் பகருவேன்

4. பன்ன லந்திகழ் பானுவி ருளினிற்
கன்ன லின்சுவை வேப்பங் கனியினு
றந்ந லங்கள் சிறந்துத யங்கல்போ
லென்னி னுவல ரேற்றம் விளங்குமால்.

5. ஆயுண் முற்றும ருந்தமிழ்க் கேயளித்
தாயு நூல்க ளிறிந்த புலவர்மு
னோயெனுந் துணையேனு மெந்நூலையு
மாய கிற்றில னுதலி னஞ்சுவேன்.

6. வானி ரங்கிவ் விருத்த மணித்தொடை
தானி ரங்கிச் சரண்புகு மென்கையில்
வான ரங்கைய கப்படு மாலையென்
றியானி ரங்குவ னேழைக் கவிக்கையோ!

7. விருத்தப் பாவியல் வேண்டிஞ் சிறார்க்கெனு
வுரைத்தன் மேயின னெண்புகழ் நூலினு
ருரைத்தி லாரென வாதலி னுட்கொளார்
வருத்த மோடு வயங்கு பிழையரோ.

# விருத்தப்பாவியல்

## முதற் படலம்

### அறுசீர்க்கழி நெடில் விருத்தம் *

சீர்வளர் கமலச் செல்வி
  திகழ்தரு வதனக் கொண்மூக்
கார்வள மலிந்த கூந்தற்
  கன்னலுங் கசக்கு மின்சொ
லேரிளங் கொங்கை மின்னே
  ரிடையெழிற் கொடியம் பேதாய்
சீர்விள மாச்சீர் தேமாச்
  சீரிணை திரட்டு மீங்கே "

(இ - ள்). இவ்விருத்தத்தில் விளச்சீர், மாச்சீர், தேமாச்சீர், ஆகிய இம்மூன்று சீருங் கூடிப் பின்னுமொருகால வருகின்றன.

முதல் மூன்றடியு மகரேஉ முன்னிலை. விளமென்புழிக் கூவிளம் கருவிளமிரண்டும், மாவென்புழித் தேமா புளிமா விரண்டுங் கொள்க. விளச்சீரன்றி வேறு சீரும் வருவது ஒழிபியலுட்காண்க. இவ்வாறே பின்வரு மொவ்வொரு விருத்தமுந்தன் யாப்பிலக்கணத்தைக் கூறுகிற தென்றறிக.

[குறிப்பு:—முறையே விளச்சீர், மாச்சீர், தேமாச்சீர் ஆகிய இம்மூச்சீர்க் கோவைகளால் ஆக்கப்பட்ட இவ்விருத்தம் கமது இலக்கியத்தில் பல இடங்களில் ஏராளமாய்க் காணலாம்

---

* மனம்போனவாறு வரிசையாய் ஆறு சீர்களை அடுக்கினால் அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம் உண்டாகுமென்று எண்ணலாகாது. தமிழில் (சந்தமற்ற) அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம் ஏழே வகை என்பதை இவ்வாசிரியர் இங்கு விளக்குகின்றார்.

(உ - ம்.) திருநாவுக்கரசு நாயனார் திருமுறைகளில் காணப்படும் நேரிசைப் பண்பெற்ற விருத்தங்கள் இவ்வகையின:—

வேதியா! வேத கீதா!
விண்ணவ ரண்ணா! வென்றென்
றோதியே, மலர்கள் தூவி,
யொருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய்!
படர்சடை மதியம் சூடும்
ஆதியே! ஆல வாயி
லப்பனே! யருள்செ யாயே!

அப்பர்—திருவாலவாய்த் திருநேரிசை 1.

இத்தகைய விருத்தங்களில் விளச்சீர் இடத்தில் மாங்காய்ச்சீரும் வரும். இதற்கு விதி பின்னர் கூறப்படும்.]

2. இருமா காய்ச்சீ ரரையடிக்கா
யிவையே மற்றை யரையடிக்கும்
வருமா றுணர்க வாரணியுங்
கொங்கை பொலியு மடக்கொடியே!

(இ - ள்.) இரண்டு மாச்சீரு மொருகாய்ச் சீருமோரடியி னிரண்டு பாதிக்கும் வருமாறறிக. [இதற்கு உதாரணம் திருவாசகத்தில் குழைத்த பத்து.] அப்பரில், பாவநாசத் திருப்பதிகம், பொது,—பண்-பழம் பஞ்சுரம்.

"பற்றற் றார்சேர் பழம்பதியைப்
பாசூர் நிலாய பவளத்தைச்
சிற்றம் பலத்தெந் திகழ்கனியைத்
தீண்டற் கரிய திருவுருவை

வெற்றி யூரில் விரிசடைசை
விமலர் கோனைத் திரைசூழ்ந்த
ஒற்றி யூரெம் முத்தமனை
உள்ளத் துள்ளே வைத்தேனே." *
—பாவநாசத் திருப்பதிகம். 1.

8. மதிநா றும் வாண்முகத்தா மரைதிளைக்கும்
வண்டுவிழி மடப்பொற் பாவாய்
முதனான்கு காயாகிப் பின்னவைமா
தேமாவாய் முடியு மன்றே

(இ - ள்.) முதனான்கு சீருங் காய்ச்சீராகவும் கடையிரண்டு மாச்சீர் தேமாச் சீராகவும் பெறும்.

ஐந்தாவது தேமா வல்லது புளிமாவாகவும், ஆறாவது தேமாவேயாகவும் வரும்.

கங்காளர் கயிலாய மலையாளர் கானப்பே ராளர் மங்கை
பங்காளர் திரிசூலப் படையாளர் விடையாளர் பயிலுங் கோயில்
கொங்காளப்பொழில்நுழைந்து கூர்வாயால் இறகுலர்த்திக் கூதல்நீங்கி
செங்கானல் வெண்குருகு பைங்கான லிரைதேருந் திருவையாறே.

குறிப்பு:—அப்பர் திருவாரூர் - பழமொழி, திருக்கழிப்பாலை பண் - காந்தாரம் முதலிய பதிகங்கள், இதற்கு உதாரணமாம்.

---

* மற்றும் திருவாசகத்திலும்,
"உடைய னேநின் றனையுள்கி
உள்ள முருகும் பெருங்காதல்
உடையா ருடையாய் நின்பாதஞ்
சேரக் கண்டிங் கூர்நாயிற்
கடையா னேனெஞ் சுருகாதேன்
கல்லா மனத்தேன் கசியாதேன்
முடையார் புழுக்கூ டிதுகாத்திங்
கிருப்ப தாக முடித்தாயே." என்பது காண்க.
—திருச்சதகம். 56.

4. சிறிய பூங்குழற் கருவிழிக் குயின்மொழி
மயிலுறழ் நடைநல்லாய்
குறிய வீற்றுமாக் கூவிள முவ்விளங்
காயொடுங் குறிகொள்ளே.

(இ - ள்.) சிறிய இறுதியையுடைய மாச்சீரொன்றுங், கூவிளச்சீரொன்றும், விளச்சீர் மூன்றும், காயச்சீரொன்றும் வருமாறறிக. எ - று.

காயொடு மென்பது மாங்காயென வறிக. முதற்சீர், குற்றெழுத்திறுதியாய மாச்சீரேனும் மெய்யெழுத்தீற்று மாச்சீரேனும் வருமென்பதற்கு குறியவீற்றுமா வெனப்பட்டது.

[இதற்கு உதாரணம் திருவாசகம் அதிசயப்பத்து அற்புதப் பத்து முதலியன.]

"ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை யென்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடு கின்றிலை தெருவுதோ றலறிலை செய்வதொன் றறியேனே."

—திருச்சதகம் 31.

5. ஒன்று மூன்றட் டாறு
மாவிளம் பிறவிட முறுமே.

(இ - ள்.) முதல் மூன்று ஆறு ஆகிய மூன்றிடங்களில் மாச்சீரும், பிறவிடங்களில் விளச்சீருமுறும்.

முதற் சீர், "குறிய வீற்றுமா" எனமேல் விதியாற் கொள்க. இதற்கு உதாரணம்:—

"நீல வண்டறை கொன்றை நேரிழை மங்கையொர் திங்கள்
சால வாளர வங்கள் தங்கிய செஞ்சடை யெந்தை
ஆல நீழலு ளானைக் காவுடை யாதியை நாளும்
ஏலு மாறுவல் லார்கள் எம்மையு மாளுடை யாரே."

—சுந்தரர் தேவாரம்.

6. கடையது மாவிள மாச்சீர்
நலந்தது வெண்டளை யென்ப
துடையது பாதிபி ரண்டு
மோவியப் பொற்கொடிப் பாவாய்.

(இ - ள்.) மாச்சீராகிய அந்தத்தையும் விளச்சீரும் மாச்சீரும் வெண்டளையிற் புணரப்பெற்றதையு மிரண்டு பாதியிலுமுடையது.

மற்றச்சீர்களைப்போல வேறுபாடின்றி, மாச்சீரையேயுடைய தாதலான் கடையது முன்னைக்கப்பட்டது.

[குறிப்பு:—இதற்கு திருவாசகம் குயிற்பத்தினின்றும் உதாரணம் காட்டலாம்.]

"உன்னை யுகப்பன் குயிலே யுன்துணைத் தோழியு மாவன்
பொன்னை யழித்தநன் மேனிப் புகழிற் றிகழு மழகன்
மன்னன் பரிமிசை வந்த வள்ளல் பெருந்துறை மேய
தென்னவன் சேரவன் சோழன் சீர்ப்புயங் கன்வரக் கூவாய்."

இதிலுள்ள இயற்சீர் வெண்டளையை நோக்குக. விளத்திற்குப் பதிலாய் மாங்காய்ச்சீரும் வரலாம். ஆகையால் இவ்வகை விருத்தம் இருவகை வெண்டளைகளும் விரவி யிருக்கப் பெறுதலும் இயல்பேயாம்.

7. மாச்சீ ரைந்து காய தொன்று
வண்டார் குழன் மாதே.

(இ - ள்.) ஐந்து மாச்சீரு மொருகாய்ச்சீரும் புணரும்.
இதற்கு உதாரணம் :—

" பாரோர் விண்ணோர் பரவி யேத்தும் பரனே பரஞ்சோதி
வாராய் வாரா வுலகந் தந்து வந்தாட் கொள்வானே
பேரா யிரமும் பரவித் திரிந்தெம் பெருமா னெனவேத்த
ஆரா வமுதே யாசைப் பட்டேன் கண்டா யம்மானே."

—திருவாசகம்—ஆசைப்பத்து. 7.

குறிப்பு:—அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தங்களில் இக்காலத்தில் தமிழில் வழங்குவன இவ்வேழு வகைகளேயாம். வேறு வகைகள் பல இருந்தனவேனும், அவை கம்பன் காலத்திற்கு முன்னரே இறந்தன. இக்காலத்தில் நாம் அவ்வாறு இறந்த விருத்தங்களை உயிர்ப்பிக்க முயலல் மரபன்று. கம்பன் காலத்தில் வழங்கிய விருத்தங்களையே நமது முன்னோர், ஆயிர வருடங்களாகக் கையாண்டு வந்தனராதலால் அவர்கள் சென்ற வழியில் நாம் செல்வதே மரபு. மேற்கூறிய எழு வகையைச் சாராத மற்றொரு வகையில் தற்காலப் புலவர் ஒருவர் பாடுவாராயின் இது அறுசீர்கழி நெடிலாசிரிய விருத்தமன்றென நீக்குவதே தமிழ் மாணவர் கடனும்.

## இரண்டாம் படலம்

### கலித்துறை

1. குறிய மாவொடு கூவிள மிருவிள மாவென்
றறுதி காயது மந்தமர் தருமருங் குழலே!

(இ - ள்.) சிறிய மாச்சீரோடு கூவிளச்சீரு மிரண்டு விளச்சீரு மொருமாச்சீரும் புணர்ந்து வருமென்பாயாக. கடையில் காய்ச்சீரும் வரும்.

கடையில் காய்ச்சீரின்றி வருவதற்குதாரணம்:—

" பூக மெங்கிள பணிக்குல மெங்கின புரைதீர்
வான மெங்கின மாதிர மெங்கின வரைக

டார டெங்கின புணரிக ளடெங்கின தறுகட்
டீர டெங்கின நிருதர்கோன் பெரும்படை செல்ல.

—கந்தபுராணம்—திக்குவிசயப்படலம். 29.

கடையில் காய்ச்சீருக்குதாரணம்:—

" இரதி யின்னணம்வருந் திடத்தொன்மைபோ லெங்கோமான்
விரத மோனமோ டிருத்தலு முன்னரே விறற்காமன்
கருது முன்பொடி பட்டது கண்டனர் கலங்குற்றார்."
சுருதி நன்றுணர் திசைமுகன் முதலிய சுரரெல்லாம்."

— கந்தபுராணம்.

இவ்வகைக் கலிநிலைத் துறைகளே தமிழிலக்கியத்தில் பெரும்பாலும் பாராட்டப்பட்டனவாகும். மற்றொருவகையுமுண்டு. அதைப் பின்வரும் சூத்திரத்தில் காண்க.

2. சீர்மாங்கனி கூவிளங் கூவிளஞ் சொற்ற தேமா
நேர்மா விரண்டிற் றனியேகுறி னிற்கு மென்றால்
ஓர்மா புளிமா டுறமாபுளி மாங்க னிச்சீர்
சேர்மா விரண்டு மதனக்கொடி தேர்கு வாயே.

(இ - ள்). மாங்கனிச் சீரொன்றுங், கூவிளச் சீரிரண்டும் குறிய தேமாச்சீரொன்றுங், பின்னுந் தேமாச்சீரொன்றும், அல்லது கனிச்சீருக்குப் பின்னிற்கு மிரண்டாஞ் சீரின் முதலெழுத்து ஒற்றையடுக்காத தனிக் குறிலாயிருக்கு மென்றால், மாச்சீரொன்று புளிமாச்சீரொன்று புளிமாங்கனிச் சீரொன்று முன் சொன்ன தேமாச் சீரிரண்டு வருமென்றறிக.

சீரினியல் சொன்ன மாத்திரையானே நேரசை முதலடிக்கு எழுத்துப்பதினொன்கென்பதும் நிரை முதலடிக்குப் பதினைந்து என்பதுந் தானே யமைதலால் கூறவேண்டா தாயிற்று. கூறிய இரண்டு விதிகளுள் முன்னையதற்கு முதலிரண்டடியும், பின்னையதற்குக் கடையிரண்டடியு முதாரணமாமாறு காண்க.

முதற்சீர் மாவாகவும், இரண்டாவது புளிமாவாகவும் வருதற்கு ஈடாகக் காய்ச்சீரும் தேமாவும் வருவது முண்டு. உதாரண மொழியியலுட் காண்க.

[குறிப்பு:—மாங்கனிச் சீரொன்றும் கூவிளச் சீர் இரண்டும் தேமாச்சீர் இரண்டும் பெற்ற கலித்துறைக்கு உதாரணம்:—

"தாமந்தரு மொய்ம்புடை வீரன்ச யந்தன் விண்ணோ
ரேமந்தரு வன்சிறைச் சூழலு ளேக லொடுந்
தூமந்திகழ் மெய்யுடைக் காவலர் துப்பு நீங்கி
மாமந்திர மாமலைப் பட்டும யங்க லுற்றார்."

கந்த புராணம் - வீரவாகு சயந்தனைத் தேற்று படலம். 5

இதில்:—"வீரன்ச." என்னும் தேமாங்காய்ச்சீர் கூவிளத்திற்குப் பதிலாய் வந்தது.

கனிச்சீருக்குப் பின்நிற்கும் இரண்டாம் சீரின் முதலெழுத்து ஒற்றை யடுக்காத தனிக்குறிலா யிருக்குமாயின் அக்கலித்துறையை அலகிடுதல் வேறுவிதமென இந்நூலாசிரியர் கொண்டனர் போலும்

மாச்சீரொன்று புளிமாச்சீரொன்று புளிமாங்கனிச்சீரொன்று முன் சொன்ன தேமாச்சீர் இரண்டும் சேர்ந்து வருவதற்கு உதாரணம்.

"அன்னா ரமருக் களஞ்சென்றயி லேந்து நம்பி
நன்னா யகமாந் திருநாமம் வின்று போற்றிப்
பொன்னா மறைகூர் திருநீங்கிய புங்க வன்றன்
முன்னா வணுகி யிருந்தானடன் மொய்ம்பின் மேலோன்."

கந்தபுராணம் - வீரவாகு சயந்தனைத்தனைத் தேற்று படலம். 8.

முதற்சீர் மாவாகவும் இரண்டாவது புளிமாவாகவும் வருவதற்கு ஈடாக காய்ச்சீரும் தேமாவும் முறையே முதலிரண்டு சீர்

களாய் வர, மூன்றுஞ் சீர் புளிமாங்கனிச் சீராகவும், நாலு, ஐந்து சீர்களாய், முன்னே சொன்ன தேமாச்சீர்களாகவும் வருவது முண்டு. உதாரணம்:—

“செறிகின்ற ஞானத் தனிநாயகச் செம்மலுடை
மெறிகின்ற வேலை யழுதிற்செவி யேக லோடு
மறிகின்ற துன்பிற் சயந்தன் மகிழ் வெய்தி முன்ன
றிகின்றி லன்போற் றொழுதின்னை யுரைத லுற்றான்.”

கந்தபுராணம்.—வீரவாகு சயந்தனைத் தேற்று படலம். ௨.

மேற்கூறிய இரண்டு சூத்திரங்களுள் அடங்கிய அடிகளைப் பெற்ற கலி நிலைத்துறைகளே தற்காலத்தில் தமிழில் வழங்குவன வாகும். இந்த கட்டளை கலித்துறையைப் பற்றி யாதுங்கூறாமல் விடப்பட்டது. ஏனெனில் கட்டளைக் கலித்துறையின் விதி அறியாதாரில்லை. அதில் வெண்டளை அமைவதும் நேர் பதினாறே நிரை பதினேழென ஏற்பட்ட விதியும் நோக்குங்கால் அது ஒருவாறு வெண்பாவைத் தழுவியதென்று கொள்ளலாம். ஆகையால் அதற்குத் திருவிருத்தமென்னுஞ் சிறப்புப் பெயரும் அப்பர் தேவாரம் முதலிய விடங்களிற் காணலாம். நம்மாழ்வாரும் அதைத் திருவிருத்தமென்றே அழைத்தார். அதை ஒட்டி மேற்கூறிய இரண்டாம் சூத்திரத்துள் அடங்கும் வகைகள் ஒருவகை கட்டளை பெறும். அதாவது நேர், பதினான்கே, நிரை, பதினைந்தும் என்பது. இதைக் கவனிக்க]

## மூன்றாம் படலம்

### எழுசீர்க்கழி நெடில் விருத்தம்

நால்விள மும்மா நடைபெறுங் கொடிய
நச்சுவே லயன்மா ரமிழ்த்தே

(இ-ள்.) நான்கு விளமு மூன்று மாவு மோரடியில் நடக்கு[illegible]
எ-று

இரண்டு நான்கு எழு இவ்விடங்களில் மாச்சீரும் பிறவற்றில் விளமும் வருமென்பது இவ்விருத்தத்தை யாராய விளங்குகின்றது.

குறிப்பு:—சந்தமற்ற எழுச்சீர்கழிநெடில் தமிழில் ஒரே வகையாமென்பது இவ்வாசிரியர் விளக்குகின்றார். அவ்வகை நால்விளம் மும்மா வெனினும், இரண்டாஞ்சீர், நான்காஞ்சீர், எழாஞ்சீரிவையே மாச்சீராக, ஏனைய சீர்கள் விளமாகப் பாடலாமன்றி கணித முறையில் ஏற்படக்கூடிய $\frac{7!}{4! \times 3!}$ முப்பத்தைந்து வகை எழுசீர்க்கழிநெடில் விருத்தங்கள் பாடலாகா. முதற்சீர், மூன்றாஞ்சீர், ஐந்தாஞ்சீர் மாச்சீர்களாம் மற்றவை விளமாகவரின் அது சந்தம் பெற்று "மத்த கோகிலம்" என்னும்பெயருடன் காணப்படும். இதை எழுசீர்ச் சந்த விருத்தங்களிற் காண்க. இவ்வேழு சீரில் முதற்சீர் நீக்கி ஆறு சீருடன் பாடும் வழக்குண்டு. அவ்வழக்கம் சிறுபான்மையேயாம். ஆசிரியர் எடுத்துக்காட்டிய எழுசீர்க்கழிநெடில் விருத்தத்திற்கு உதாரணம்:—

"கண்ணுதன் மதுரைப் பிரானையிவ் வாறு
கருதிய பாணியாற் கனிந்து
பண்ணுதல் பரிவட் டணைமுத லிசைநூல்
பகர்முதற் றொழிலிரு நான்கு
மொண்ணுற வார்தல் வடித்திடல் முதலா
வெட்டெனக் கரணமும் பயப்ப
மண்ணவர் செவிக்கே வானவர் செவிக்கும்
வாக்கினு ளுவிளை யமுதம்"

திருவிளையாடற் புராணம்—இசைவாது வென்ற படலம் 37

## நான்காம் படலம்

### எண்சீர் கழிநெடில் விருத்தம்

[குறிப்பு:—இவ்வாசிரியர் எண்சீர்க் கழிநெடில் (சந்தமற்ற) விருத்தங்களை இரண்டு வகைகளாகத் தொகுக்கின்றார். அவற்றை

முதல்வகை முதலிரண்டு சீர்களும் காய்ச்சீராயும், மூன்றாவது மாசீர் அல்லது காய்ச்சீர் பெற்றும், நான்காவது மாச்சீராய், அரையடிவர, மற்றைய அரையடியும் அவ்வாறு தலாம். இவ்வகையிற் சில விகற்பங்கள் உளவென்பதை ஆசிரியர் உதாரணங்களாற் காணலாம்]

1. காயிரண்டு மாவென்று தேமா வொன்று
கலந்தவடி யிரட்டுமதன் விகற்பங் காணே

(இ - ள்.) காய்ச்சீரண்டும், மாச்சீரொன்றும், தேமாச்சீரொன்றும் புணர்ந்திரட்டும். அதன் விகற்பங்களையுங் கண்டு கொள்க.

விகற்பங்களுக்குதாரணமாவன:—

(i) "வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே யாளென்னைக் கொண்டாய் போற்றி
யூற்றாகி யுள்ளே யொளித்தாய் போற்றி
யோவாத சத்தத் தொளியே போற்றி
யாற்றாகி யங்கே யமர்ந்தாய் போற்றி
யாறங்க நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி
கயிலைமலை யானே போற்றி போற்றி *

முதல் மூன்று சீருமிதில் வெண்டளையில் வந்தது காண்க.

(ii) காப்பிளக்கப் பொய்யுரைத்து கவிதியம் தேடி
கலமொன்று மறியாத காரியரைக் கூடிப்
பூப்பிளக்க வருமேழைப் புற்றீசல் போலப்
புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்

* திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்.

காப்பதற்கும் வகையறியீர் கைவிடவு மாட்டீர்
கவட்டுத்தோன் மரத்தலையிற் காலுழைத்துக் கொண்டீர்
ஆப்பதனை யசைத்துவிட்ட குரங்கதனைப் போல
அகப்பட்டீர் கிடந்துழல வகப்பட்டீரே" *

—பட்டினத்தடிகள்.

இதில் மூன்றுஞ் சீர் மாவேயன்றி காயும் வருகின்றது. நான்காஞ்சீர் தேமாவே யன்றிப் புளிமாவும் வருகின்றது. பின்னும்,

(iii) "தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியே
னில்லையே யென்னாத வியற்பகைக்கு மடியே
னிளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன்
† அல்லிமென் முல்லையந்தா ரமர்நீதிக் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே" *

இதுவு முன்னையதை யொத்த விருத்தமென்க - இக்காலத்துக் கவிகள் "அல்லிமென்" என விளமாகப் பாடுவார்.

2. ஆதி மாவொடு கூவிளம் விளமா
ஆறு மாமறை யடியிருந் தொடையே.

(இ - ள்.) முதற்கணுள்ள தனிமாச் சீருங் கூவிளமும், விளமும், மாச்சீரு மறையடிக்கு வரும்.

மற்றை யரைக்கு மிதுவே விதியென்பது கூறவேண்டாதாயிற்று.

---

† இதை இசையிற் பாடும்போது அல்லி இ இ மென் என்பதுபோல் நெடிலாக அளபெடைபெறும். இத்தகைய இசையளபெடை சந்த விருத்தங்களிற் காணலாம். * சுந்தரர் தேவாரம்.

குறிப்பு: இவ்வகை யெண்சீர்கழிநெடிலாசிரிய விருத்தங்கள் மிகவும் இனிய இசை தருவனவாம்.

(உ - ம்)

விதிவ ழாதபல் லுறுப்புடை மறையின்
    மிக்க தாகுங்கா யத்திரி யதனி
னதிக மஞ்சமா மந்திர மதனி
    ளுறி ரண்டெழுத் தனினினெட் டெழுத்தாம்
பதியு மேன்மையெட் டெழுத்தினஞ் செழுத்துக்
    கோடி கோடிமேம் பட்டதஞ் செழுத்தி
னதிலு மேகம்ப நாதமா மனுத்தா
    னூறு கோடியின் மிக்கதென் றுணர்வீர்.

—காஞ்சிபுராணம் - திருவேகம்பப் படலம்.

இவ்வாறு எண்சீர்க்கழிநெடில் விருத்தங்கள் பலவகையாகி விகற்பங்களுடன் வருதலால், தமிழில், எண்சீர்க்கழிநெடில் மாணவர் எளிதில் பாடக்கூடிய பாக்களாயின. இவ்வகைகளிற் சிலவற்றைப் பிளந்து கலி விருத்தங்களாக்கலும் எளிதே. அவ்வாறே கலிவிருத்தங்களிரட்டித்து எண்சீர்க்கழிநெடில் விருத்தங்கள் உண்டாக்கலும் இயல்பேயாம்.

## ஐந்தாம் படலம்

### கலி விருத்தம்

குறிப்பு: கலிவிருத்தமாவது கலிப்பாவின் இலக்கணம் சில பொருந்தப்பெற்றதென்பர். அதனால் அவ்வாறு பெயர் பெற்றதோ வென்பதைச் சாதிக்கத்தக்க ஆதாரவுகள் இல. கலிப் பாவைப்போல் எத்தகைய சீர்களும் இதில் வைத்து யாத்தல் கூடும்.- துறை, தாழிசை, விருத்தம் என்னும் புறனடைச் செய் யுட்கள் பண்டைத் தமிழ்ப்பாக்களான வெண்பா, கலிப்பா, ஆசிரி

யப்பா, வஞ்சிப்பாக்களுக்கு உள. வடமொழிக் கல்வியால் தமிழ்க் கவிகள் விருத்திசெய்த விருத்தங்கள் பெரும்பான்மையும் பண்டைத்தமிழ்ச் செய்யுட்களுக்கு சம்பந்தம் பெற்று ஆதர வடைந்தனவெனச் சொல்லலாகாது. சங்கக் காலமும் அதற்குப்பின் சில நூற்றாண்டுகளும் விருத்தங்களின் வித்துக்களை காட்டுங் காலங்களாயின. சிலப்பதிகாரத்தில் கானல் வரியில் பாடப்பட்ட பாடல்களில் விருத்த இலக்கணத்தையும் காணலாம். இசைக்குப் பொருந்துமாறு இயற்றமிழ் பாக்களில் விகற்பங்கள் உண்டாக்கிப் பாடியதே நமது தற்கால விருத்தங்களின் வேர்களாம். இவற்றையடிப்படையாகக் கொண்டு, திருஞான சம்பந்தர் இசைத் தமிழ்ப்பண்களை இயற்றமிழ் யாப்பில் அமைத்த அற்புதம் அவர் திருமுறைகளில் காணலாம்.

இன்னிசை வெண்பாவுக்கும் கலிவிருத்தத்திற்கு பேதஞ் சிறிதே. வெண்பாவின் நான்காமடி நான்கு சீராகப் பாடுவோமானால் அது கலிவிருத்தமன்றோ? வெண்டளை பெற்ற அத்தகைய கலிவிருத்தங்களிற் பல சந்தம் பெற்று சந்தக்கலி விருத்தங்களெனவும் கூறப்படும்.

கலிவிருத்த இலக்கணம் வரையறுத்த பின்னர், இவ்வாசியர், ஏனைய விருத்தங்களில் எதிர் பாராத உற்பத்திகள் சில நமதிலக்கியத்தில் உள்ளனவென்பது உரையிற் கோடலாய்க் காட்டுகின்றார் அவையாவன:— எண்சீர் விருத்தவளவையிற்பாதி பெற்றுக் கலி விருத்தமாகுதல், அறுசீர் இரட்டிப்பன்னிருசீர்க்கழிநெடிலாதல் கலிவிருத்த இலக்கணம் பெற்று ஒருசீர் குறைந்து வஞ்சி விருத்தமாதல், கலிநிலைத்துறையில் வரும் விகற்பங்கள், அறுசீர்க்கழி நெடில் விகற்பங்கள், கலிநிலைத்துறையில் ஒருசீர் குன்றி கலிவிருத்தமாதல், கலிவிருத்தம் இரட்டித்து எண்சீராதல் எழுசீர்க் கழி நெடிலில் ஒருசீர் குன்றி அறுசீராதல் முதலியன. இவை நம்திலக்கியத்தில் காணப்படினும், அவற்றின் இலக்கணம் கண்டுகொள்ள

மாணவர்களுக்கு ஆசிரியர் அவற்றை எடுத்துக்காட்டினும், தமிழ் மாணவர் இக்காலத்தில் அத்தகைய செய்யுட்கள் பாடல் மரபன் றென்பதே ஆசிரியர் கொள்கையாம். இக்கருத்து உணராவிடின் பின்வரும் விதிகள் இப்படலத்தில் நன்கு விளங்கா.

1. காத லிக்குங்க லிவிருத் தத்தொரு
   பாத மாவருங் கூவிளம் பற்றிடி
   னாத லானிரை நேர்க்கெழுத் தாறிரண்
   டோதி னூரொரு பஃதுட னென்றரோ.

(இ - ள்) மாச்சீரோடு அருமையான கூவிளம் புணருமா னால் கவிகள் விரும்புகின்ற ஒருவித கலி விருத்தப்பாதமாகும். ஆகையினல், நிரைமுதலடிக்கும் நேர் முதலடிக்கும் எழுத்துப் பன்னிரண்டும் பதினென்றும் புலவர் விதித்தார். (எ - று)

காதலிக்கும் பாதமெனக் கூட்டுக. முதலிலொரு சிறுமாவும் அதன் பின்னர் மூன்று கூவிளமும் புணருமென்பது, இவ்வுதா ரணப் பாட்டை நோக்க விளங்கும். கூவிளமேயன்றிக் கருவிள மும் மாவும் மாங்காயும் ஒழிபியலுள் விதிக்கப் படுவதற்கொக்க வெண்டளையிற்புணரு மென்பதும், கெட்டெழுத்தீற்றுமாவும் அக் கத்திலன்றி மற்றைய விடங்களில் கெட்டெழுத்தீற்று விளமுஞ் சிறுபான்மையே பயிலுமென்பதும், விளங்க "அருங் கூவிள", மெனப்பட்டது. கெட்டெழுத்து, நடுவிலுங் கடையிலுமுள்ள மாங்காயி னருமையு மதனலேயமைகின்றது.

எழுத்தின் தொகை இவ்வளவென்பது "மாவருங் கூவிளம் பற்றிடி" னென்னும் விதியிலே யடங்கிக்கிடப்பதால் "ஆதலால் நிரை நேர்க்கு" எனப்பட்டது.

[இவ்விதிக்கு உதாரணம் அப்பர், திருக்குறுந்தொகை, கம்பன் "உலகம்யாவையும் தாமுள வாக்கலும்" என்னும் செய் யுள் முதலியனவாம்.]

2. முதலிரு சீர்விள மூன்று மாவினம்
பதமது கடையினிற் பசிய கூவிளம்
மதியது பொருகிலா மதிதொறுங் குறைஇ
புதியது செய்யினும் பொருவில் பூவையே.

(இ - ள்) முதலிரண்டு சீர்களும் விளச்சீராம். மூன்றில் குறிய வீற்று மாச்சீராகும். பாதத்தினந்தத்திற் பசிய கூவிளச் சீராகும். எ - று.

இதற்கு உதாரணம் அப்பர் நமச்சிவாயப் பதிகம். (சொற் றுணை வேதியன் சோதி வானவன்). மற்றும் மேருமந்திர புராணத் திலும் பின்வரும் உதாரணம் காண்க:—

"தூயசந் திரன்கலே பெருக நாடொறுந்
தீயவன் காளகந் தேயு மாறுபோற்
சீயசந் திரன்றவம் பெருக நாடொறுங்
காயமுங் கசாயமுங் கரிச மானவே."

—நால்வரும் சுவர்க்கம் புக்குசருக்கம்—543.

3. பண்ட மிழ்க்கவிப் பாக்களனைத்தையுந்
தொண்டு கூறுதல் கூடுத லின்மையால்
வண்டு லாமது வார்குழல் வந்துழிக்
கண்டு கொள்வ தறிஞர்க டமையால்.

(இ - ள்) பாவலரது இனிய தமிழ் விருத்தங்களை யெல்லா மெடுத்துக் கொண்டு இலக்கணங் கூறல் கூடாமையால் அவைகள் சேரிடும் போது அவைகளது இலக்கணத்தைத் தெரிந்து கொள் வது அறிவுடையோர் கடமையாகும். இதனுற் கூறிய விருத்தங் களின் பாகத்தையும் அசைகளை யிரட்டித்தும் பலவாருகப் பெருக்கியும் வருபவைகளையு மற்றவைகளையுங் கொள்க. அவை கள் வருமாறு:—

"மட்டுவிரி பொழிற்குன்றம் வலவந் தேறிச்
சட்டவிடா தபுமரவச் சகர்யற் போற்றி
யெட்டுருவாங் குமாரலிங்கத் திறைவன் பாதம்
மட்டுமெது மலர்தூவி யஞ்சித் தானல்."

(தணிகை புராணம்).

இது எண்சீர் முதல் விருத்தத்தினரையாகும்.

"நீருஞ் சுமந்தேன் விறகெடுத்தேன்
நித்தஞ் சுமந்தேன் சாணகம்
நிகழ வடிபட் டுதைபட்டேன்
நின்றேன் வையைக் காளாக
ஆரும் விரும்பாத் துகிலுடுத்தேன்
அழகு மேனி கரிக்கோல
மானே னதனு லல்லோவுன்
னடியா ளுனக்குச் சரியானேன்
காரும் விரும்புங் கடுவணிந்த
களனே கருணைப் பெருங்கடலே
கமலத் தயன்மால் காணுத
கால காலா வென்றுயரந்
தீரும் படிதன் னருள்புரிவாய்
சிவனே யமரர்க் கொருவிருந்தே
தேவே தெய்வ மறைப்பொருளே
திகழுங் கடலூர்ச் சேவகனே."

இது இரண்டாவது அறசீரிாட்டியது.

"அங்க வெல்லை யவுணர்கோ
னெங்க ளுத னென்றிருற
மங்குல் போல்வ ரம்பிலாச்
செங்கண் வாளி சிதறினன்."  (கந்தபுராணம்.)

"நூறெ ரிந்திடு நோன்மையோன்
மாறில் பொன்னகர் மாடுற
வீறு வாமதில் விண்ணுலா
மாறு பாய வமைந்தனன்." (கந்தபுராணம்.)

இது முதல் கலி விருத்தத்தைப் போன்று ஒரு விளச்சீர் குறைய வந்த வஞ்சி விருத்தம்.

"செக்க லங்கழு னிப்பழு னந்தய லேசெழும்
புன்னை வெண்கிழி யிற்பவ ளம்புரை பூந்தராய்
துன்னி நல்லிமை யோர்முடி தோய்கழ லீர்சொலீர்
பின்னு செஞ்சடை யிற்பிறை பாம்புடன் வைத்ததே."
—சம்பந்தர்.

"மார னைப்பொடி கண்டவ னந்தண மைந்தனுக்
கார ணற்கன கக்கிழி யீந்தத றைந்தன
மேர னத்திரன் சூழ்மல ரோடையி டத்தினுஞ்
சீர னைக்கரை யேற்றிய வாறுசி னத்துவாம்."

"தாரார் கொன்றைய ஞரசிங் கேச்சரந் தன்னொடு
வாரா கீச்சர மேன்மைதெ ரிந்துவ ழங்கினு
னோரா சின்றவி தன்குண பாங்கொ றழ்வலி
போரா னேற்றவ ரக்தக வீச்சரம் போற்றுவாம்."

இதில் முன்னிரண்டும் முதல் கலிநிலைத்துறையைப்போன்று கடைச்சீர் விளமாய் முதலிரண்டு சீர் நீங்கலாக மற்றவை வெண்டளையிற் புணர்ந்து வந்தது காண்க. மூன்றாவது முதல் மாச்சீர் நீண்டு முன்னையவை போன்றுள்ளது.

"தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து
தண்டேன்றித் தளர்வார் தாமுஞ்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து
நாற்கதியிற் சுழல்வார் தாமும்

வாழ்ந்த பிணிகலிய முன்செய்த
வினையென்றே முனிவார் தாமும்
வாழ்ந்த பொழிதினே வாவெய்து
நெறிமுன்னி முயலா தாரே."

பால்வெண் மதிசூடிப் பாகத்தோர் பெண்கலந்து பாடி யாடி
கால னுடன்கிழியக் காய்ந்தா ரிடம்போலுங் கல்சூழ் வெற்பி
னீல மலர்க்குவளை கண்டிறக்க வண்சாற்று நெடுந்தண் சாரற்
கோல மடமஞ்சை பேடையோ டாட்டயருங் குறும்ப லாவே.

—சம்பந்தர்.

"மாதர் நகையாய் மதுரேச ருண்பலிக்கெம் மனையாய் வந்து
காதன் முகத்தரும்பிக் காட்டியென் சிந்தை கலந்தார் போலும்
காதன் முகத்தரும்பக் கையரவு தீரக் கலப்பேன் பாதி
பேதை யுருவா யிருந்தார் நாணிவிழித் தாவிபிழைத் தேன்போலும்."

"மாத்தாண் மதமா னெருத்தின்
மடங்கலெனச் சொல்வாரும்
பூத்தா ரொலிவாம் பரிமேற்
புகர்மா வெனப்போ வாரும்
பார்த்தார் பரிதி யெனவாம்
பரித்தே ருகைத்தூர் வாரும்
தேத்தா ருள்வண் டலம்பச்
சிலம்பின டக்கின் றாரும்.

—திருவிளையாடற் புராணம்.

205242
1958099

இவைகளில் முன்னிரண்டும் மூன்றும் அறுசீர்விருத்தத் திற்குச் சிறிது வேறு பட்டிருப்பதையும் பின்னிரண்டும் வெண் டளையில் வருவதுங் கண்டு கொள்க.

"அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ
அப்ப னெத்தனை யெத்தனை யப்பனோ
பின்னை யெத்தனை யெத்தனை பெண்டிரோ
பிள்ளை யெத்தனை யெத்தனை பிள்ளையோ

முன்னை யெத்தனை யெத்தனை சன்மமோ
மூட னாயடி யேனுமறிந்திலேன்;
இன்ன மெத்தனை யெத்தனை சன்மமோ
யென்செய் வேன்கச்சி யேகம்ப நாதனே."

—பட்டணத்துப் பிள்ளையார்.

முதல் கலிவிருத்த மீரட்டி வந்தது. இது கட்டளைக் கலிப்பா வெனப்படும்.

"பரவக் கெடும்வல் வினைபா ரிடஞ்சூழ
விரவிற் புறங்காட் டிடைநின் றெரியாடி
யரவச் சடையந் தணன்மேய வழகார்
குரவப் பொழில்சூழ் குரங்காடு துறையே."

—சம்பந்தர்

"கண்ணார் கடல்சூ ழிலங்கைக் கிறைவன்றன்
திண்ணா கம்பிளக் கச்சரஞ் செலவுற்றாய்
விண்ணோர் தொழும்வேங் கடமா மலைமேய
அண்ணா வடியே னிடரைக் களையாயே."

—திருமங்கையாழ்வார்-பெரிய திருமொழி.

இவை இரண்டாங் கலித்துறை போன்று நான்காஞ் சீர் குறைய வந்தன.

"கருப்புச் சிலைக்கு நாணு வெம்மைக் கைக்கொண் டருள்கென்
றொருப்பட் டணமி மொய்த்த வூறழப் பொதும்பர் வண்டு
குருப்பொன் மகரப் பகுவா யொளிருங் கூத்தன் கொழுந்தேன்
மருப்பட் டலருந் தொடையன் மருந்த வந்து சூழ."

"வைய முழுது மடிய வருமோ ரூழி முடிவின்
வெய்ய விருள்வந் தடர விருநீர்ச் சலதி வேகஞ்

செய்து நிமிர்ந்து பொங்கித் தேங்கிக் கிடந்த காலை
பைய வுறக்க நீத்து மீளப் படைக்க வுன்னி."

—காஞ்சி புராணம்.

இவைகளிலடிமுழுதும் மாச்சீரே வருவது காண்க.

"உருவார்ந்த மெல்லியலோர் பாக
முடையீ ரடைவோர்க்கு
கருவார்ந்த வானுலகங் காட்டிக்
கொடுத்தல் கருத்தானீர்
பொருவார்ந்த தண்கடலொண் சங்கந்
திளைக்கும் பூம்புகலி
திருவாய்ந்த கோயிலே கோயி
லாகத் திகழ்ந்தீரே."

—சம்பந்தர்.

"சேர்ந்துதிரு மூலட்டந் தொழுது.
போற்றிச் சிந்தைகளி
கூர்ந்துதிருப் பாப்பரசு கலுழன்
முதலோ ருடன்சூழும்
சேர்ந்ததவ யோகத்தி னெடுநாள்
முயன்று னக்காலை
வார்ந்தசடை பிரானுரு மகிழ்ந்து
காட்சி கொடுத்தருளி."

இதில் இரண்டு காய்ச்சீரு மிரண்டு மாச்சீரு மொருகாய்ச்
சீரு முறையே புணர்ந்தமை காண்க.

" துஞ்ச வருவாருந் தொழுவிப் பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப் பாருமுனை நட்பாய்
வஞ்சப் படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்ட
அஞ்சும் பழையனூ ராலங் காட்டெம் மடிகளே."

"நுணங்கு மறைபாடி யாடி வேடம் பயின்றரு
மிணங்கு மலைகளோ டிருகூ றொன்ற யிசைந்தாரும்
வணங்குஞ் சிறந்தொண்டர் வைகலேத்தும் வாழ்த்துங்கேட்
டணங்கும் பழையனூ ராலங் காட்டெம் மடிகளே."

"கணையும் வரிசிலையும் மெரியுங் கூடிக் கவர்ந்துண்ண
விணையி லெயின் மூன்று மெரித்திட்டா ரெம்மிறைவனார்
பிணையுஞ் சிறுமறியுங் கலையு மெல்லாங் கங்குல்சேர்
துணையும் பழையனூ ராலங் காட்டெம் மடிகளே."

(சம்பந்தர்)

இவை மூன்றும் முன்னையவை போன்று முதற்சீர் மாவாய்ப் பின்னிரையசையாய் வந்தன.

"வெங்கள் விம்மு வெறியார் பொழிற்சோலைத்
திங்க ளோடு திளைக்குந் திருப்புத்தூர்க்
கங்கை தங்கு முடியா ரவர்போலும்
எங்க ளுச்சி யுறையு மிறையாரே."

"நல்ல கேள்வி ஞான சம்பந்தன்
செல்வர் சேடர் றுறையுந் திருப்புத்தூர்ச்
சொல்லல் பாடல் வல்லார் தமக்கென்று
மல்லல் தீரு மலைவ மடையாவே."

(சம்பந்தர்-திருப்புத்தூர்)

இவைகளில் மாவுங் காயும் வந்தது காண்க.

"ஆனினைத் துடனேவே றமுதமுஞ் சிலர்சிலர் தம்மின்
தேனனாக் திருவமுது முதலிய சிலர்சிலர் தம்மின்
வானளாவிய கோயின் மாளிகை யெங்கணு மணிகள்
கானனா மலர்பட்டிற் கவினலஞ் சிலர்சிலர் புனைமின்"

து முதற்சீர் குறைந்த வெழுசீர் விருத்தமென்க.

" சேரணி திகழ்திரு மார்பில் வெண்ணூலர்
திரிபுர மெரிசெய்த செல்வர்
வாரணி வனமுலை மங்கையோர் பங்கர்
மான்மறி யேந்திய மைந்தர்
காரணி மணிதிகழ் மிடறுடை யண்ணல்
கண்ணுதல் விண்ணவ ரேத்தும்
பாரணி திகழ்தரு நான்மறை யாளர்
பாம்புர நன்னக ராரே." (சம்பந்தர்)

இதில் நான்கில், எழில் மாச்சீரு மற்ற இடங்களில் விளமும் வருதல் காண்க.

" தாந்தம் பெருமை யறியார் தூது
வேந்தர்க் காய வேந்த ரூர்போல்
காந்தள் விரன்மென் கலைநன் மடவார்
கூந்தல் கமழுங் கூட லூரே."

(திருமங்கை யாழ்வார்).

இதில் முழுமையு மா வந்தது காண்க

" தோற்ற முண்டேல் மரண முண்டாந் துயரமனை வாழ்க்கை
மாற்ற முண்டேல் வஞ்சமுண்டா நெஞ்சமனத் தீரே
நீற்ற ரேற்றர் நீல கண்டர் நிறைபுனல்நீள் சடைமேல்
ஏற்றர் கோயி லெதிர்கொள் பாடி யென்பதடை வாமே"

(சுந்தரர் தேவாரம்)

" எரியார் மழுவொன் றேந்தி யங்கை யிடுதலை யேகலனா
வரியார் வளையா ரையம் வவ்வாய் மாநலம் வவ்வுதியே
சரியா நாவின் வேத கீதன் தாமரை நான்முகத்தன்
பெரியான் பிரமன் பேணி யாண்ட பிரமபுரத் தானே."

(சம்பந்தர்)

* "வாயலின் மன்னர்வ ணக்கிநிற்ப வந்தாங்
கேயின செய்யு மடந்தை மாரோ டேகி
பாயல் துறந்த படைத்தடங்கண் மென்றோள்
ஆயிழை தன்னைய டைந்த வாழி மன்னன்."

"அடைந்தவ ணோக்கிய ரந்தை யென்கொல்வந்து
தொடர்ந்ததெ னத்துயர் கொண்டு சோரு நெஞ்சன்
மடந்தையை மானையெ டுக்கு மானை யேபோல்
தடங்கைகள் கொண்டுதழீஇ யெடுக்க லுற்றான்."

"நின்று தொடர்ந்த நெடுங்கை தம்மை நீக்கி
மின்றுவள் கின்றது போல மண்ணில் வீழ்ந்தாள்
ஒன்றுமி யம்பல ளீடு யிர்க்க லுற்றாள்
மன்றல ருந்தொடை மன்னனுவி யன்றாள்

இவை முதல் விளச்சீராய் இரண்டாவது கூவிளமாய் மூன்று நான்கும் நெடிலீறு நீங்கிய தேமாவாய் கடையது தேமாச்சீராய் வருகின்ற கலித்துறை யென்க.

## ஆறாம் படலம்

### சந்தவுறுப்பியல்

1. சீரியலி னலமைவ நீந்தமிழ் விருத்தம்
ஆரியம றைந்தவுயர் சந்தவபி தான
வாரியது மாத்திரையி னலமையு மென்ப
பாரிய லமைந்தபது மத்திருவ ணங்கே.

(இ-ள்) இன்னசீர் வரத்தகுமென்னு மிலக்கணத்தைப் பொருந்தின மதுரமான தமிழ் விருத்தங்கள். வடமொழியிற் சொல்லிய சிறந்த சந்த மென்னும் பெயரையுடைய சமுத்திரம் மாத்திரையாகிய இலக்கணந்தைப் பொருந்துமென்ற சொல்லு வர். (எ-று)

---

* கம்பராமாயணம் கைகேசிசூழ் வினைப்படலம் 2, 8, 4 செய்யுட்கள், இது முதல் மூன்றுமாம்.

[குறிப்பு:—இந்நூலாசிரியருக்கு முன்பு தமிழில் சந்தத்தை உணர்வதற்குச் சந்தக்குழிப்பு என, ஒருவகை இசை இலக்கண வாய்ப்பாடுகளை நமது புலவர் நிருவி, அவற்றைவரிசையாய் அடுக்கிச் சந்தவுருப்பு விளக்கினார். இதைப்பெரும்பாலும் அருணகிரி நாதர் திருப்புகழில் காணலாம். தானச்சந்தம், தன்னச்சந்தம், தனனச்சந்தம், முதலான இசை யோசைகளை இலக்கணவாய்ப் பாடாகக் கூறியதால் ஒன்றிற்கொன்று உள்ளபேதம் இயற் தமிழ் இலக்கண வகையில் காட்டக்கூடாமையாயிருந்தது. பட்டினத்தடிகள் உடற்கூற்று வண்ணம், தாயுமானவர் பாடிய வண்ணங்கள் இவையாவும், கழிநெடில் ஆசிரியச் சந்தவிருத்தமென்பது, மேற்கூறிய சந்தக்குழிப்பு வாய்ப்பாடுகள் நமக்கு காட்டாதொழிந்தன. மற்றும், அவ்விருத்தங்கள் இயற்றமிழ் யாப்பில் அடங்குமோ என்பதும், சந்தேகத்திற்கு இடங்கொடுக்கலாயிற்று. நமது நூலாசிரியரே, சந்தமாவது மாத்திரை அளவால் அமைவதென்பதை விளக்கி, அம்மாத்திரைத் தொகைகள் ஒழுங்காகவும் அடுக்கடுக்காகவும் ஒரு முறையைப் பின்பற்றி நிற்றல் (Rythmic Arrangement) சந்தந் தருமென்று கசடற மொழிந்தும், பவணந்தி கூறிய வகையில் எழுத்துக்களை உயிரற்ற ஜடதத்துவமாய்க் கருதாமல் ஜீவதத்துவமாய் கருத வேண்டிய வகையில் சந்த அளவையைப் பின்வரும் விதிகளில் விளக்கியிருக்கின்றார். அதாவது உயிரெழுத்துக்கு ஒரு மாத்திரையென்றும் மெய்யெழுத்துக்கு அரை மாத்திரை யென்றும் பவணந்தி கூறினான்றிப் பின்னமாத்திரை முழுமாத்திரையுடன் சேருங்கால், என்ன ஆகுமென்பது, விளக்கவில்லை. உயிர்மெய்யெழுத்தின் மாத்திரை அதிலேறியுள்ள உயிர் மாத்திரையே மாத்திரை யென்றும், அம்மெய்க்கு மாத்திரை யில்லையென்றும் கண்டோம். இங்கு உயிருக்குப் பின் வரும மாத்திரைகள் என்னபயன் தரும் என்பது இரண்டு விதிகளில் இனி வருவது காண்க.]

2. குற்றுயிர்த னக்குமிரு மாத்திரை குறித்தார்
ஒற்றதைய டுத்ததையி னென் றுதனி நிற்பின்
மற்றவுயிர் மாத்திரையி ரண்டென வகுத்தார்
ஒற்றதைய டுப்பினுமு ணர்ந்தறிய வல்லார்

(இ - ள்) உணர்ந்தறிய வல்லவர்களாகிய வடமொழியாசிரியர் குற்றெழுத்துக்கும், மெய்யெழுத்தை யடுத்திருக்குமாஞல் மாத்திரை யிரண்டென்று குறித்தார். மெய்யெழுத்தடுக்காது தனி நிற்குமெனில், ஒரு மாத்திரை குற்றெழுத்துக்குக் குறித்தார். மற்ற நெட்டெழுத்துக்கு மெய்யடுத்தாலும் தனிநின்ருலு மாத்திரை யிரண்டென வகுத்தார்.

மெய்யடுத்த குற்றுயிர்க்கு மாத்திரை யிரண்டென்பது சந்த விருத்தத்துக்கே புரித்தாய் 'மூன்றுயிரளபிரண்டா நெடி லொன்றே, குறிலோடை யைக் குறுக்கமொற்றள பளை யொற்றி உக்குறுக்கமாய்தம், கால்குறண்மஃகானய்த மாத்திரை" என்னுஞ் சாதாரண விதிக்கு விரோதித்த மமைகின்றதென்னும் புதுமை தோன்ற "குற்றுயிர்தனக்கும்" என உம்மை கொடுக்கப் பட்டது. "இயல்பெழு மாந்தரிமை நொடிமாத்திரை" என்னும் விதியே சந்தத்துக்கு மமைதலால் கூறவேண்டாதாயிற்று. மெய் யடுத்த குற்றெழுத்துக்கிரண்டு மாத்திரை யென்பது புதிய விலக் கணமாகலின் முன் வைக்கப்பட்டது.

3. நீண்டவுயி ரொற்றுடைய நீண்டில திரண்டும்
நீண்டகுறி லேதனி நிகழ்ந்தகுறி லென்றே
மாண்டவடி தானமவை வைத்தது பொருந்த
வாண்டுவரு மீண்டுநனி யல்குமிடை மாதே"

(இ - ள்) நெட்டெழுத்து மெய்யடுத்த குற்றெழுத்து ஆகிய விரண்டும் நெட்டெழுத்தென்றும் மெய்யடுக்காத குற்றெழுத்தே குற்றெழுத்தென்றும் முன்காட்டிய மாத்திரை இலக்கணத்துக்

கொக்க, வைக்கப்பட்டதாகிய மாட்சிமையடைந்த பெயர்கள் இந்நூலிலாண்டு வரப்பெறும். (எ-று.)

[குறிப்பு:—சந்த விருத்தங்களை அலகிடும்போது, ஒவ்வொரு அடியிலுள்ள சீர்கள், முறையே எத்துணை மாத்திரை அளவின வென்பது மாணவர் கணக்கிடுவாராக. ஒவ்வொரு சீர் அந்தத்தில் நிற்கும் குற்றெழுத்தும், ஏனைய அசைகளில் மெய்யெழுத்து பின் வராத தனிக்குற்றெழுத்தும் ஒரே மாத்திரை அளவென்றும், ஏனைய உயிர்களில் நெடில், மெய்யைப்பின்வரப்பெறினும், குறில், மெய்யைப் பின்வரப்பெறினும் இரண்டு மாத்திரை அளவென்றும் கணக்கெடுத்தல் வேண்டும். ஆயினும், அந்தத்தில் வரும் குறில் தனிக் குறிலாயினும், இசைக்கு அம்மாத்திரை அளவு போதா தெனின் நெடில்போல் இரண்டு மாத்திரை பெறும், என்பதும் பின்வரும் விதியால் விளங்கும்.]

அந்தத் துறைகுன் றியவக் கரமே
சந்தத் தினினீ டியிராஞ் சமமாய்
வந்தாற் றிடுசீர் கடையவ் வழியாஞ்
செந்தா மரைசேர் திருவா ணுதலே.

(இ-ள்) பாதாந்தத்திலுள்ள குற்றெழுத்து சந்தப்பாக்களில் நெட்டெழுத்தாகும். ஓரடியின் சமமாய் வருகின்ற சீர்களின் (ஓரடியின் சமபாகத்தின்) இறுதியிலுமவ்வாறேயாகும்.

"அங்கிங் கெனாதபடி யெங்கும் ப்ரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி"

இதனிறுதியிலுள்ள "கி" யாகிய குறிலை நெடிலாகவுரைக்க.

"முன்னொரு காலத்தின் மூவுல கந்தன்னில்
வந்திடு முயிர்செய்த வல்வினை யதனாலே
யந்தமின் மறையெல்லா மடிதலை தடுமாறிச்
சிந்திட முனிவோருந் தேவரு மருளுற்றார்." (கந்தபுராணம்)

இதிலெவ்வோரடியு மிரண்டு சமபாகங்களை யுடைத்தாயிருக் கின்றது. ஆகலின், "வந்திடுமுயிர் செய்த" என்னுமரையடியினந் தத்திலுள்ள தகரக்குற்றெழுத்தை நெடிலாகக் கொள்க.

[குறிப்பு :—இயற்றமிழிலக்கணத்தில் நெட்டெழுத்தே அளபெடுத்து நிற்கவும், அதைக்காட்ட அந்நெட்டெழுத்துக்குப் பின்னர் அவ்வினக் குறில் வைத்து எழுதலும் மரபாம். குற்றெழுத்து நீட்டல் விகாரம்பெறாது அளபெடாது. இசையிலக்கணத்தில் அவ்வாறன்று. நெடில்போல் குறில், மாத்திரை யளவுபெறினும் நெடிலின் உச்சரிப்பு பெறாது. "கா" என்பதற்கும் கஅ, அல்லது கஅஅ என்பதற்கும் இசையில் பெரும்பேதம் உண்டு. அதனால் நம்து சமயாசாரியர் திருமுறைகளில் அளபிடைக்குறி காணலரிதாம். ஆதலாற் சந்த விருத்தங்களில் அடியீற்றிலும், அரையடியீற்றிலும் நெடிலாகிய அசைவரவேண்டிய விதியிருக்கக்குறில் ஈற்றசையாய் நின்றால் அக்குறில் மாத்திரை நீண்டு இசையில் ஒலிக்குமென்பது ஆசிரியர் கருத்து. மேற்கூறிய உதாரணங்களில் "அங்கிங்கெனாதபடி" என்னும் தாயுமானவர் செய்யுள் ஐந்துமாத்திரைச் சீர் ஐந்தும் எழுமாத்திரைச் சீர் ஒன்றும் பெற்ற அறுசீர் சந்தவிருத்தம் இரட்டியதாகும். "பூர்த்தியாகி" என்பது $2+1+2+1$ ஆக ஆறு மாத்திரையாதலால் "கி" என்னும் ஒலி நீண்டிசைக்குமென்பர். அவ்வாறே அவர்கூறிய கந்தபுராணச் செய்யுளிலும் கூவிளம், கூவிளங்காய்" என்பது இரட்டி நிற்பதால் காயிடத்தில் நிற்கும் ஒற்றெழுத்து நெடில்போலாமென்பதும் ஆசிரியர் குறிப்பிட்டனர். ஆகையால் இச்சந்தவுறுப்புக்களை முன்வைத்துப் பின்வரும் சந்தவிருத்த இலக்கணவிதிகளை யுணர்வோமாக.]

# ஏழாம் படலம்

## சந்த விருத்தம்

### கலிச்சந்த விருத்தம்

1. முதலெ ழுத்து மூன்று குற்றுயிர்
மதியி ரண்டு மாறி மாறியே
வதியு மேன்ம னோர மாவென
வுதவி னாரு வப்ப நாமமே.

(இ - ள்.) முதல் மூன்றெழுத்து குற்றெழுத்தாய் எண்ணுகின்ற நெடில் குறிலென்னுமிரண்டெழுத்து மாறிமாறித் தங்குமானால்* மனோரமா வென்று உவப்ப நாமம் வைத்தார் (எ - று.)

இதில் முதல் மூன்று சீர்கள் மூன்று மாத்திரை யளவுடையதாய்க் கடையது ஐந்து மாத்திரைக் கூவிளச் சீராய் முதற்சீர் புளிமாச் சீராய் வருமெனினு மமையுமென்க. "யாறிமாறியே வதியுமேல்" எனவரையறை யின்றிக் கூறப்பட்டதேனும், கலிச்சந்தமாகையாலும் மூன்றுமாத்திரைச் சீர்களைக் கூறப் புகுந்தமையாலும், நெடிலுங்குறிலும் மும்மடங்கு மாறி வந்து கடையில் நெட்டெழுத்தோடு முடியுமென்க *

[குறிப்பு:—இத்தகைய விருத்தம் பின் வரும் விதிக்கும் சில உதாரணமாகலாம்.]

"ஆட ரம்பை நீடரங்
கூடு நின்று பாடலால்
ஊடு வந்து கூடலிக்
கூடு வந்து கூடினேன்.

கரக்க வந்த காமநோய்
துரக்க வந்த தோமினால்

---

* ஒரு சீர்குறைந்து மனோரமாவினிலக்கணம் பொருந்தும் வஞ்சி விருத்தங்களுள.

இரக்க மின்றி யேவினன்
அரக்க னைந்த ளுய்ந்தனன்.

அன்ன யக்க ளுதியாய்
இன்ன நீரு மீகையான்
என்ன தாளி னிங்குமென்
றன்னு மேற்கு ணர்த்தினன்"

—கம்பராமாயணம் விராதன் வதைப் படலம் 65—67

2. முந்து மூன்று மூன்றெ ழுத்தவா
யந்த மொன்று மைந்த தாருமால்

(இ - ள்.) முதல் மூன்று சீர்களு மூன்று மாத்திரைச் சீர்களாகவும், இறுதிச் சீரைந்து மாத்திரைச் சீராகவும் நடக்கும். (எ - று.)

மூன்று மாத்திரைச் சீர்களிலெவையேனு முதல் மூன்றிடத்திலும், ஐந்து மாத்திரைச் சீர்களிலெவையேனும் இறுதிச் சீராகவும் நடக்குமென்க. இவ்விதச் செய்யுட்களின் நான்கு பாதங்களு மாத்திரை யளவான் ஒத்து சீரளவாலு மெழுத்தளவானும் பேதப்படுவதால், இவைகள் தமிழிற்கே யுரியன வென்க.

"வாம தேவ னென்னு மாமுனி
காம ரன்னை கருவின் வைகுநாட்
பேமு றக்கும் பிறவி யஞ்சினு
னேமு ருமை யிதுநி னைக்குமால்"

"வன்பு பூண்ட மனவ கப்படா
வென்பு மீண்ட விறைவர் தம்மடிக்
கன்பு பூண்ட வறிவின் மேலவர்
துன்பு பூண்ட தொடர்பு நீக்குவார்."

(காஞ்சி புராணம்)

இவைபோன்ற விருத்தங்களிவ்விதியாலமையு மென்க.

குற்றெழுத்திறுதியாய காய்ச்சீரைந்து மாத்திரையாகலான் அந்தத்தில் வரப் பெறுமோவெனின், சந்தமாகையால் அந்தத்தினுள்ள குறிலேகீட்டின் ஆறுமாத்திரையாகலான் வரத்தகாது என்க.

3. நாலக் கரமுற் றுநடக் குமவை
நீலக் குழலாய் நிகழும் பலவாய்
நாலக் கரமா நவில்வெண் டளையிற்
சாலப் பகர்வார் தமிழ்நா வலரே.

(இ - ள்) நான்கு மாத்திரைச்சீர்களால் நடக்குஞ் சந்தக் கலிவிருத்தங்கள் பலவிதமாய் நிகழும். நான்கு மாத்திரையுள்ள மாச்சீரைச் சொல்லுகின்ற வெண்டளையில் திகழப் புலவர் மிகவும் பாடுவர். அது பலவிதமாய் நிகழுமென்பவற்றுளொன்று.

இதற்குப் பெயர் பின் விருத்தத்தாற் காட்டப்படும் நான்கு மாத்திரைப் புளிமாச்சீர் நான்கு வருமெனினுமமையும். நீண்ட இறுதியையுடைய புளிமாச்சீர் நான்கென்பது மதுவே. அக்கரமென்பது குற்றெழுத்தினொரு மாத்திரை யென்க.

[குறிப்பு:—இவ்விதியும் பின்வரும் விதியும் தொடர்பெனக் கொள்க.]

4. நிரைநேர் முதலா நிகழும் வகையா
னிருபா லவைதம் மியல்பென் றனரால்
நிரையே முதலா நிகழ்தோ டகமென்
றுரையும் பெயரோ டொளிர்காந் தியுமே.

(இ - ள்.) நிரையசையும் நேரசையுமடி முதலில் நிகழ்கின்ற தன்மையினுல், முன்பாட்டிற் சொன்ன விருத்தங்களிருபகுப்பாகிய வியல்பையுடையன வென்று சொன்னார். அவைகள் நிரையசை முதலில் நிகழுந்தோடக மென்னும் பெயரும், விளங்குகின்ற காந்தியுமாம். (எ - று.)

முன் விருத்தம் காந்தி விருத்தத்துக்கும் இது தோடகத்துக்கு முதாரணமா மாறுகாண்க.

[குறிப்பு:—இவ்வாசிரியர் நான்கு மாத்திரை அளவுள்ள சீர்கள் வெண்டளையிற் புணர்வரும் இருவகைக் கலிச்சந்த விருத்தங்களுக்கு மாத்திரம் விதியும் நாமமும் கூறுகின்றார். அவற்றுள் முதல் விதியில் நிற்கும் உதாரணம் காந்தி விருத்தமாகும். காந்தி விருத்தமாவது நாலுமாத்திரைத் தேமாச்சீர் முதற்சீராயும் ஏனைய மூன்றும் நான்கு மாத்திரைப் புளிமாச் சீர்களாகவும் வருவது.]
உதாரணம்:—

வெய்தா மெயசா னிடைமே வருநீ
மைதா தவிநே ரையவொன் றுளதோ
கொய்தாய் வரவே கழுகொய் திலனேல்
எய்தா தொழியா னிதுவென் னைகொலாம்.

—கம்பராமாயணம். அயோமுகிப்படலம். 63.

தோடக விருத்தமாவது நான்கு மாத்திரைப் புளிமாச்சீர்கள் நான்காலமையப் பெற்றதாகும். உதாரணம்.

கமையா னொடுமென் னுயிர்கா வலினின்
றிமையா தனித் துணைதாழ் வுறுமோ
சுமையா வுலகூ டிழுறேல் வினையேன்
அமையா துகொல்வாழ் வறியே னெனுமால்

—கம்பராமாயணம். அயோமுகிப் படலம். 76.

இவ்விரண்டு வகை விருத்தங்கள் வடமொழிப் பெயரால் எடுத்துக் காட்டின. இவை நீங்கலாக நான்கு மாத்திரைச் சீர்களாலமையப்பட்டு வெண்டளை பெறும் விருத்தங்கள் பலவகை நமது மொழியிலுள வென்பது ஆசிரியர் குறிப்பிடுகின்றார். அப்பர் விடந்தீர்த்த பதிகமும் நான்கு மாத்திரைச் சீர்கள் வெண்டளையிலமையப் பெற்ற கலிச்சந்த விருத்தங்களேயாம்.

## சந்தக் கலி விருத்தம்

5. வேதப் பொருளார் விண்டோய் மொழியார்
ஓதிற் றிலரீ தோதாந் தமிழே
தீதற் றநறுந் தேமா புளிமா
பேதைக் குணமார் பின்றாழ் குழலே.

(இ - ள்.) வேதப் பொருளடங்கிச் சிறப்புற்றோங்கிய ஆரிய மொழியார் இதை யோதிலர். (ஆயினும்) தமிழ் மொழியிலுண்டு. குற்றமற்ற நல்ல தேமா புளிமாச்சீர்கள் கலந்து வருமென்க.

குறிப்பு:—நான்கு மாத்திரைத் தேமா புளிமா வருமென்க. இவ்விருத்தம் தமிழிலேயே உளது. ஆரியத்தில் இத்தகைய விருத்தங்கள் இல்லாததால் அதைத் தமிழ்ப்பற்றுடைய நம்பியா ரூரரும் சம்பந்தரும் மிகவும் ஆர்வத்துடன் எடுத்து ஆண்டனர். அந்நான்கு மாத்திரைத் தேமா புளிமா கலந்த சந்தக்கலி காண்க. (உதாரணம்.)

"நீரும் மலருந் நிலவுஞ் சடைமே
லூரும் மரவம் முடையா னிடமாம்
வாரும் மருவி மணிபொன் கொழித்துச்
சேருந் நறையூர் சித்தீச் சரமே."

—நம்பியாரூரர் தேவாரம்.

மற்றும் சம்பந்தர் திருநாகேச்சரம் - பண் - இந்தளம் - பதிகத்தை நோக்குக.

"பொன்னேர் தருமே னியனே புரியும்
மின்னேர் சடையாய் விரைகா விரியின்
நன்னீர் வயனா கேச்ச ரநகரின்
மன்னே யெனவல் வினைமாய்ந் தறுமே."

6. ஒருநான் குகலைப் புளிமா வொருநான்காய்
மருவக் கடைநீ டயிர்வந் திடுமன்றே.

(இ - ள்) நான்கு மாத்திரைப் புளிமாச்சீர் நான்கு புணரப் பாதாந்தத்தில் நெட்டெழுத்து வரும்.

"சூலப் படையான் விடையான் சுடுநீற்றான்
காலன் றனையா ருயிர்வவ் வியகாலன்
கோலப் பொழில்சூழ்ந் தகுரங்க ணின்முட்டத்
தேலங் கமழ்புன் சடையெந் தைபிரானே."

—சம்பந்தர்.

என்பதும் இவ்விருத்தமே என்க. நேரசை முதலாயினது.

"பலவும் பயனுள் ளனபற் றுமொழிந்தோங்
கலவம் மயில்கா முறுபே டையொடாடிக்
குலவும் பொழில்சூழ்ந் தகுரங் கணின்முட்டந்
நிலவும் பெருமா னடிநித் தநினைந்தே."

என்பது நிரை முதலாயினது.

[குறிப்பு:—இதுவும் வெண்டளை விரவிய விருத்தமேயாம். ஆதலால் இது தமிழிற்கேயுரிய மற்றொருவகைச் சந்தவிருத்தமாம். மேற்கண்ட விதிக்கு தக்க உதாரணம் பெரிய புராணத்தில் காணலாம். இதில் அந்தத்திலுள்ள நெட்டெழுத்து குறைந்தது.]

"வடிவே லதிகன் படைமா னவரைக்
கடிகு டிரணக் களவாய் நிரவிக்
கொடிமா மதில்சூ ழுருமும் பொறையூர்
முடிசே ரியனூர் படைமுற் றியதே."

பெரிய புராணம் - புகழ்சோழர் புராணம். 27.

7. கோதறு கூவிள மூன்றொரு தேமா
போதர மேலவர் போற்றிய தற்கே
மாதரா சேயழ கேமயி லேமால்
தோதக மாம்பெயர் சொற்றன ரன்றே.

(இ - ள்) குற்றுயிரீற்ற கூவிளச்சீர் மூன்றும் நான்கு மாத்திரைத் தேமாச்சீ ரொன்றும் வரப்பெரியயோரதற்கு மேன்மைப்படுத்தித் தோதகமாகிய பெயரைச் சொன்னார். (எ - று.)

நான்கு மாத்திரை மாச்சீரானாய விருத்தங்களைச் சொல்லி நான்கு மாத்திரை விளச்சீருள்ள விருத்தத்தைச் சொல்வதால் கோதறு என்பதற்கு குற்றுயிரீற்றவெனப் பொருளுரைக்கப்பட்டது.

[குறிப்பு:—தோகத்திற்கு உதாரணம்:—

> "எண்ணியி ருந்துகி டந்துந டந்தும்
> அண்ணலெ னுகினை வார்வினை தீர்ப்பார்
> பண்ணிசை யார்மொழி யார்பலர் பாட
> புண்ணிய னுறைை பூவண மீதோ."

—வன்றொண்டர்.]

8. சம்பக மாலாச் சந்த விருத்தத்
தம்பத மெட்டேழ் தானமி ரண்டில்
அம்புவி யாய்குற் றுவியு மூன்றின்
வம்பவிழ் கோதாய் வந்தன மாதோ.

(இ - ள்) எட்டு, ஏழு, இரண்டு, மூன்று இந்த இடங்களில் பூமியிலுள்ளோர் ஆய்கின்ற குற்றெழுத்தும் வந்த பாதங்கள் சம்பகமாலாச் சந்தவிருத்தப் பாதங்கள். (எ - று.)

குற்றுவியு மென்றமையால் மற்ற இடங்களில் நெட்டெழுத்து றென்பதாயிற்று.

9. சீரே நீளுந் தேமா முற்றும்
பாராய் தேனார் பாலேய் தீஞ்சொல்
வாரோ கொங்கைப் பூணார் மானே
பேரே வித்யுன் மாலைப் பேசே.

அடிமுழுதும் நீண்ட தேமாச்சீரே வருவது காண்க. அதற்கு வித்யுன் மாலைப் பெயரைச் சொல்லு. (எ - று.)

"வீயா வாமா மாவா யாவீ
யாவா யாரா ராயா வாயா
வாயா டேமா மாடே யாவா
மாரா மாதோ தோமா ராமா"
"தேடா வாழை மாவீ டாதே
தேனு ராமா வாழா யாதே
தேயா ழாவா வாரா னுதே
தேடா வீமா ழைவா டாதே."

—காஞ்சிபுராணம்.

இவைகளும் வித்யுன்மாலை விருத்தங்களாம்.

10. வாழி யென்னுமு தாரண மாச்சீர்
சூழு மோரிரு கூவிளை தூய்மா
வாழி வையம றைமணி ரங்கப்
பாழி யங்கவி பைந்தொடி மாதே.

(இ - ள்) வாழியென்னும் வாய்பாட்டு மாச்சீருமாராய் நின்ற இரண்டு கூவிளச்சீரும் தூய்மையான மாச்சீரொன்றும் (தேமா என்றபடி) வருவது கடல்சூழ்ந்தவுலகத்தார் சொல்லு நின்ற மணிரங்க மென்னும் பெருமையான விருத்தமாகும். (எ - று.)

இதற்குதாரணம்:—

"வீரத் திண்டிறன் மார்பினில் வெண்கோ
டாரக் குத்திய முத்திட நாகம்
வாரத் தன்குலை வாழை மடற்சூழ்
ஈரத் தண்டென விற்றன வெல்லாம்"

கம்பராமாயணம்-யுத்தகாண்டம்-இராவணியன் வதைப்படலம் 97.

[குறிப்பு:—இவ்விருத்தயாப்பு சில விகற்பங்களுடன் சுந்தரர் தேவாரப்பண் தக்கேசியில் காணலாம். இவ்விருத்தம் இரட்டியதின் உதாரணம்:—

கண்ட முங்கறுத் திட்டபி ரானைக்
காணப் பேணும வர்க்கெளி யானைத்
தொண்ட ரைப்பெரி தும்முகப் பானைத்
துன்ப முந்துறந் தின்பினி யானைப்
பண்டை வல்வினை கள்கெடுப் பானை
பாக மாமதி யானவன் றன்னைக்
கெண்டை வாளைகி ளர்புனல் நீடூர்க்
கேண்மை யாற்பணி யாவிட லாமே.

—சுந்தரர்-திருநீடூர்-பண்-தக்கேசி: 9.

11. இனிய நாயகா வென்னை யாளவா
வனைய மாவிளத் தாம்வி ருத்தமே
தனிமு கத்திறைப் சம்ம தப்பெயர்
புனையு மென்பரால் போற்று நூல்வரால்.

(இ-ள்) 'இனிய', வெண்பதைப்போன்ற குறிலீற்றுப் புளிமாவும், 'நாயகா', இதைப்போன்ற நெடிலீற்றுக் கூவிளமும், 'என்னை', இதைப்போன்ற குறிலீற்றுத் தேமாச்சீரும்', 'ஆளவா', இதைப்போன்ற நெடிலீற்றுக் கூவிளமும் ஆகிய மாச்சீர் விளச்சீரினலாகும் விருத்தம் சம்மதப் பெயரினைத்தரிக்குமென்று யாவரும் போற்று நூல் வல்லோர் சென்னுர் [எ-று]

குறிப்பு: இதற்கு உதாரணம்:—

துலாம ணிந்தவர் சூளி கைத்தலைத்
துலாமி வர்ந்தெழும் சோம னிக்கினன்
நிலாவி ரும்பொருள் நிறைந்த தாமெனா
நிலாவு மத்தலை யிவர்ந்து நிற்குமே"

—தணிகை புராணம்,

12. நாலோ டொன்பது நாலு மொன்றுமேழ்
பாலே குற்றுயிர் பாங்கர் நெடெழுத்
தாலே முற்றிடு மாகி னுமமு
மேலாஞ் சுத்தவி ராட்டு மேவுமால்.

(இ-ள்) நான்கு, ஒன்பது, ஐந்து, எழு இவ்விடங்களில் குற்றுயிரும், மற்ற இடங்களில் நெட்டெழுத்துமாகிய இவைகளால் முடியுமாகுல் மேலாகிய சுத்த விராட்டென்னும் பெயரைப் பொருந்து மென்றவாறு.

குறிப்பு: உதாரணம்:—"சங்கா ரத்தணி தாங்கு கொங்கையாள்
சங்கா ரத்தணி தந்த செங்கையா
ளுங்கா ரத்தினு ரத்த வாடையா
ளுங்கா ரத்தினு ரப்பு மோதையாள்"
—கந்தபுராணம்-அக்கினிமுகாசூரன் வதைப்படலம்95

13. ஓர்நெடிலு முக்குறிலு முற்றசிறு மூக்கா
யோர்நெடிலு மோர்நெடிலு முற்றதொரு தேமா
னேர்நிறையு மாகிலது நீள்வன மயூரப்
பேர்பெறு மெனப்பகர்வர் பேரியறெ ரிந்தோர்.

(இ-ள்) ஒரு நெட்டெழுத்தாலும், மூன்று குற்றெழுத் தாலுமாகிய மூன்று சிறிய காய்ச்சீரும், இரண்டு நெட்டெழுத் தாலாகிய தேமாச்சீரொன்று முறையே அடிநிறைய வருமாகுல் அது நீண்ட வனமயூரமென்னும் பெயரைப் பொருந்து மென்று பெரிய விலக்கணங்களையறிந்தோர் சொல்லுவார் [எ-று].

குறிப்பு—உதாரணம்:—

"சொன்றிமலை துய்த்தமுத ரத்தெழுசு டெந்தீ
யன்றைவட லைக்கனலெ னப்பெரித லைப்ப
குன்றினைநி கர்த்திருகு றட்டனுவ ருந்தா
நின்றசிவ னைப்பரவி னேர்படவு ரைக்கும்."
—திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்.
அறமைத்த திருவிளையாடல்—1.

இதுவே இந்துவதனு வெனவும்படும். ஓர் நெடில் மூன்று குறிலாகிய காய்ச்சீர் குற்றுயிரீற்றதால் சிறுகாயென விசேடிக்கப் பட்டது.

14. நுவணந்த னிற்பெரிய நுண்மறைக ளேபோல்
புவனந்த னிற்பெரிய பொன்னிமய மேபோல்
சிவணுந்த னித்தகைய தேவமொழி வல்லோர்
நவநந்தி நீயென நவின்றபெயர் நாடே.

(இ-ள்) நூலுற்சிறந்த வேதங்களைப்போலவும், பூமியில் மலைகளுக்குட் சிறந்த பொன்னிமயம் போலவும் பொருந்திய ஒப்பற்ற தன்மையுள்ள தேவபாடை வல்லவர் நவநந்தினி என்று சொல்லிய பெயர்களை கண்டறிய—(எ-று.)

இவ்வுதாரண விருத்தத்தால் நவநந்தினியினுடைய விலக்கணத்தை யறிந்துகொள்க.

குறிப்பு :—" நவநந்தியின் விற்பங்கள் :—

(1) " தேசுற்ற மாடமுறை சீப்பவரு காலோன்
வாசப்பு னற்கலவை வார்புனரி கொண்கன்
யீசப்பு லார்த்தியிட விண்படரும் வெய்யோன்
ஆசுற்ற தானவர மர்ந்திவணி ருந்தார் "

—கந்தபுராணம்-நகர்புகுபடலம் 48.

(2) " மிடற்றகுரை சூழ்வரலு யீரனெழுந் தன்னோர்
முடிச்சிகையொ ராயிரமு மொய்ம்பினொரு கையால்
பிடித்தவுணர் மன்னனமர் பேரவைநி லத்தி
னடித்தனனொ டிப்பிலவ ராவிமுழு துண்டான் "

—கந்தபுராணம்-அவை புகுபடலம் 156

[குறிப்பு:— ஒரு நெடிலும் மூன்று குறிலுமுற்ற சிறுகாயெனினும் இசையில் இத்துடன் ஒக்கும் தேமாங்கனியும் இச்சந்த விருத்தத்தில் வரக்கூடுமென்றுணர்க*]

15. முந்தோர்கு றிற்கடைமு டிந்தூறு மாங்காய்
பிந்தோரி டத்தொருவி ளங்காய்பி றங்க
முந்தோரி டத்தினது மூன்றுவ தாக
வந்தால தைத்தமிழ்வ லாராத ரிப்பார்.

(இ - ள்) முன் வருகின்ற குறிலீற்று மாங்காயும், பின் வருகின்ற வொரு விளங்காயுந் தோன்ற, மூன்றுவது சீர்முதற் சீரைப் போன்று வந்தால் அதைத் தமிழ்ப்புலவர் பெருமைப் படுத்துவர் (எ - று.)

முதற்சீர் மாங்கா யெனினும் தேமாங்காயாகவும், பின்னையது விளங்காயெனினும் ஒற்று நடுவில் மிகுந்த குறிலீற்று விளங்காயாகவும், நாலாமிடத்தில் தேமாச்சீராகவும் இவ்வுதாரணப் பாட்டால் கொள்க.

குறிப்பு - இதற்கு உதாரணம்:—

"வெங்காரி றப்புணரி வேறேயு மொன்றை
பொங்கார்க விப்புனல்த ரம்பொலிவ தேபோல்
இங்கார்க டத்திரென வென்னுமெ முந்தான்
அங்கார் தாரைபெரி தாலால மன்னோன்.

—கம்பராமாயணம் - கடல்தாவு படலம்-76

* தேவர்தொழு தேவருள் சேரிறைவ மூன்று
ளோவிநிரை வாரிதிய டுக்களையு வந்தா
யாவியுறு சிற்றுணவி னலறவிளைத் தேன்
மேவுபசி யின்னுமெனை விட்டதிலை யின்றே.

—திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்-
ஆறழைத்த திருவிளையாடல்—2.

16. வாரேறு கொங்கைமத னங்கொடிவ னப்பீர்!
பாரேம மாக்குநர்ப டுக்குநரி டும்பை
நீரேயி லீரெனினி கழ்த்துபவர் மைந்தர்
யாரேது றக்கிலரு யிர்க்கிழிபு தேர்வர்

இது வனமயூர விருத்தத்தைப் போன்று முதற்சீர் குறிலீற்றுத் தேமாங்காயானமை காண்க.

[குறிப்பு - உதாரணம்
மேதாவி கொண்டகதிர் வெய்யவனை வெஞ்சூர்
செய்தான்வ லிந்துசிறை செய்திடலின் முன்ன
மேதாமி னங்கொலென வெண்ணியவ னன்றாழ்
வாதாய னங்கடொறும் வந்துபுக லின்றே.

— கந்தபுராணம் - நகர்புகு படலம் 47]

17. பாராக்க டுங்கால்வ சப்பட்டு லைந்த
நீராழி யென்றேநி னைக்கின்ற வாழ்வை
யாரேக டப்பார்க ளத்தீரி லீரேல்
சீரார்கு ணத்தீர்தி ருப்போது ருப்பீர்

இதில் குறிலீற்றுத் தேமாங்காய் மூன்றும் தேமாவொன்றும் வந்தமை காண்க.

18. நீடெ ழுத்திறுதி நீங்கிய மாவி
னேடு மூன்றுகுறி லீற்றறு காய்ச்சீர்
கூடு மற்றையவை கூவிளை தேமா
சூடு மால்பெயர்சு வாகத மென்றே.

(இ - ள்.) குற்றெழுத்தீற்று மாச்சீரோடு மூன்று குற்றெழுத்து இறுதியிலுள்ள காய்ச்சீரும், இவைகளோடு சேர்கின்ற கூவிளமும் தேமாவும் உள்ள அடி சுவாகத மென்னும் பெயரைக் கொள்ளும் (எ - று.)

கூவிளை எ - து குறிலீற்றதென்க.

[குறிப்பு:—இதற்கு உதாரணம்.—

ஊரு லாவுமலி கொண்டல கேத்த
நீரு லாவுநிமிர் புன்சடை யண்ணல்
சீரு லாவுமறை யோர்நறை யூரில்
சேருஞ் சித்திச்சரஞ் சென்றடை நெஞ்சே.*

—சம்பந்தர் - திருநறையூர்ச் சித்தீச்சரம் - பண்தக்கராகம்—1.]

19. ஒற்று மூன்றுபதி னொன்றொ டொன்பதே
ழென்ற தானமவை நெட்டெ ழுத்தவாய்க்
குன்றெ ழுத்தொழி யிடத்து கூடினே
லொன்று நாமமி ரதோத்த மோதினர்.

(இ-ள்) ஒன்று, மூன்று, பதினொன்று, ஒன்பது, ஏழ் என்ற இடங்களில் நெட்டெழுத்தும் மற்ற இடங்களில் குற்றெழுத்தும் வருமானால் அதற்குப் பெயர் இரதோத்தஞ் சொன்னார்.

20. சிற்றுவியெ ழுத்தாலிறு தேமாங்கனி மூன்றோ
டொற்றுவிரு நெட்டக்கர மொண்சொற்றமி ழோடே
பொற்றாமரை நாணுந்திரு போலும்வத னப்பூப்
பெற்றாழ்குழ லாயக்கவி பேராமத னார்த்தை.

(இ-ள்) குற்றெழுத்தீற்றுத் தேமாங்கனி மூன்றினோடு இரண்டு நெட்டெழுத்துப் பொருந்துமானால் தமிழில் அக்கவி பெயர் மதனார்த்தை. (எ-று.)

குறிப்பு:—இதற்கு உதாரணம்.

"ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண்குண மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதம்மவை யைந்தாய்
ஆறார்சுவை யேழோசையொ டெட்டுத்திசை தானாய்
வேறாயுட னின்றானிடம் வீழிம்மிழ லையே."

—சம்பந்தர்.

* சித்தீச்சரம என்பதை இசையில் 'சித்தீச்ரம்' எனப் பாடுவதால் மூன்று குறிலீற்றுக் காய்ச்சீர் போலொலிக்கும்.

21. புளிமாங்கனி புளிமாங்கனி புளிமாங்கனி யருகே
புளிமாவரு மமிழ்தாலினை பொலனங்கொடி
[யிடையே
நளினச்சினை மலர்வித்தன நளினத்துறை திருவே
களியைத்தரு கவியேயதி கரிணியென மொழிவர்.

(இ-ள்) மூன்று* புளிமாங்கனியினருகே ஒரு புளிமாவரும். அது களிப்பைத் தருகின்ற விருத்தமாகும். பெயர் அதிகரிணி யெனச் சொல்லுவார்.

புளிமாங்கனி யென்பது குற்றுயிரீற்ற தென்க.

குறிப்பு:—உதாரணம்:—

"மயிலாலுவ குயில்கூவுவ வரிவண்டிசை முரல்வ
மயில்பூவைகள் கிளியோடிசை பலவாதுகள் புரிவ
வயில்வாள்விழி மடவாரென வலர்பூங்கொடி யசைவ
வெயிலாதவர் புறமேகுற விரிபூஞ்சினை யிடைவ"
—விநாயக புராணம்.

22. மூன்றே டொருநான்கே மும்மூன் றெடுபத்தே
தோன்று விசருங்கத் தோன்றுங் கவிநாமம்
வான்றோய் மொழிவல்லார் வைத்தார் மணிமாலை
மீன்றோய் விழிவேலால் வெல்லப் பொருதையால்.

---

*மூன்று கருவிளங்கனிகளும் அந்தத்திலொரு தேமாவும் வரும் விருத்தங்களுமுள:—

"நனைசினையன நகுவிரையன நலனுடையன நாகம்
நினையுடையன பொழுதினையென விரிவனகனி வேங்கை
கனைசுடர்விடு கதிர்மணியறை களனயர்வன காந்தள்
இனியனபல சுனையயலென விறவரையன குறிஞ்சி."
—நீலகேசி (தருமவுரைச் சருக்கம்)

(இ - ள்.) மூன்று, நான்கு, ஒன்பது, பத்து இந்த இடங்களிற் றேன்று முயிர் குறிலாக உண்டாகும் விருத்தத்தின் பெயர் வானளவு பரந்து வியாபிக்கும் பாடை வல்லார் மணிமாலை என்று வைத்தார்.

[குறிப்பு:—இதற்கு உதாரணம்:—

"அங்கோல் வளைமங்கை காண வலனேந்தி
கொங்கார் நறு(ங்)கொன்றை சூடிக் குழகாய
வெங்கா டிடமாக வெந்தீ விளையாடும்
எங்கோ னுமையாள்வான் நல்லம் நகரானே"

இதில் 3, 4, 9, 10 ஆகிய உயிர்கள் குற்றெழுத்தென்பது விளங்கும். ஏனையநெடிலாகும். முதலடியில் "மங்கை", என்பதின் "கை"யும், காண என்பதின் 'ண'வும், நெடிலோசை பெறும். அவ்வாறே 2-ம் அடியில், "கொன்றை", "காக", என்பவற்றின் ஈற்று மெய் நெடிலோசைபெறும். 3-ம் அடியின் "மாக"வும், அவ்வாறே யாம்.]

23. அஞ்சுயிர்க் கூவிளச் சீரினு லாகுமா
லெஞ்சலில் கேள்வியார் சிரக்விணீ யென்றனர்
நஞ்சமோ வேல்கொலோ நாமபா ணங்கொலோ
அஞ்சுமீ தென்கொலென் றையுறுங் கண்ணியே.

(இ - ள்) சிரக்விணீ விருத்தம் ஐந்து மாத்திரைக் கூவிளச்சீரினுல் வருமென்று குறைவற்ற கேள்வியுடையார் சொல்லினர்.

[குறிப்பு—இதற்கு உதாரணம்:—

"கானலைக் கும்மவன் கண்ணிடந் தப்பனீர்
வானலைக் குந்தவத் தேவுவைத் தானிடம்
தானலைத் தெள்ளமூர் தாமரைத் தண்டுறை
தேனலைக் கும்வயல் தென்குடித் திட்டையே"

—சம்பந்தர் - திருத்தென்குடித்திட்டை பண் - கொல்லி-7]

24 ஒன்று மூன்றினுட னெழுபதி னொன்றுபதினொந்
தென்ற வாவிநெடி லாய்ப்பிறவெ ழுத்திலகுவாய்த்
துன்று மாறறிக தூமொழியி லந்துவதனப்
பொன்றுமா ருயிரெனப் பொலியும்வே னயனமே

(இ - ள்) ஒன்று, மூன்று, எழு, பதினொன்று, பதினைந்து என்னுமிடங்களிலுள்ள வுயிர் நெடிலாய் மற்றவை குறிலாய்ப் புணருமாறறிக.

[குறிப்பு—இதற்கு உதாரணம்:—

"ஒன்றே டொன்றுமுனை யோடுமுனை யுற்றுறவிழும்
ஒன்றே டொன்றுபள வோடவிசை யோடுபுதையும்
ஒன்றே டொன்றுதுணி பட்டிடவொ டிக்குமுடனே
யொன்றே டொன்றிறுகு கவ்வுமெதி ரோடுகணையே"

நல்லப்பிள்ளை பாரதம்-பதினேழாம்போர்ச் சருக்கம் 358]

25. முன்னது கூவிளமாய் மூன்றது மவ்வியலாய்
பின்னது காயிறுதிப் பெற்றிடு கூவிளமாய்
யன்னது நான்கினையு மாடரு மென்றுணரே
நன்னுத லந்துவர்வாய் நாரியர் நாயகமே.

(இ - ள்) முதற்சீர் கூவிளமாகவும் மூன்றாவதுமந்த இலட்சணத்தைப் பொருந்தியதாகவும், இரண்டாவது கூவிளங்காயாகவும், அந்தக் கூவிளங்காயே நான்காமிடத்தையுமாண்டு வருமென்றுணர்க. (எ - று)

நான்கு மாத்திரைக் கூவிளமும் ஆறு மாத்திரையுடையதாய் நடுவினெட்டெழுத்து மிகாத கூவிளங்காயும் வருமெனக்கொள்க.

குறிப்பு:—இதற்கு உதாரணம். 20542/1958099

கொம்பனை நுண்ணிடையாள் கூறனை நீறணிந்த
வம்பனை யெவ்வுயிர்க்கும் வைப்பினை யொப்பமராச்
செம்பொனை நன்மணியைத் தென்றிரு வாரூர்புக்
கென்பொனை யென்மணியை யென்றுகொ லெய்துவதே.

—சுந்தரர் தேவாரம்

# எட்டாம் படலம்

## சந்தக் கலித்துறை

1. மூவெ ழுத்து மைந்தெ ழுத்து முற்றுவ
மேவு மென்ப சேணி நாம மேலையோர்
பாவி யல்ப சுந்த மிழ்க்கி லாதவை
தேவ பாடை தன்னு ளாய்ந்து தேர்கவே.

(இ - ள்) மூன்றெழுத்துச்சீரும் கடையிலைந் தெழுத்துச் சீரும் புணரும் விருத்தங்கள் சேணியென்னும் பெயரைப் பொருந்துமென்று சொல்லுவர் பெரியோர். பாக்கள் பொருந்திய தமிழிலில்லாதவைகளைத் தேவபாடையிலாய்ந்தறிக—(எ-று).

இவ்வுதாரணப்பாட்டால் மூன்றென்பது மூன்று மாத்திரைத் தேமா என்க.

2. நான்மாத் திரைவெண் டளைமாக் கணடக்குறுமே
ஞன்மாத் திரைமா நளினி யெனநா டுவரால்
வான்மாத் திரையா யவளம் பெறுபா டைகளாய்
தான்மாத் திரமா யதனித் தகைபா டையினே.

(இ - ள்) நான்கு மாத்திரை யளவுள்ள வெண்டளையிற் புணர்ந்த மாச்சீர்க்கணடக்கு மானால், நான் மாத்திரைப் மாச்சீர் கலித்துறையோடு நளினி விருத்தமாகுமென்று அதிக சிறந்ததும் வளப்பமான பாடைகளுக்குள் தாயுமான ஒப்பற்ற பெருமையுடைய பாடையில் ஆராய்ந்து சொல்லப்படும். முதல் நிரையசையானால் நளினியாகுமென்க.

குறிப்பு:—இதற்கு உதாரணம்

“ அம்மா ணவருக் கரசன் னரசர்க் கரசன்
செம்மாண் டனிக்கோ லுலகே ழினுஞ்செல் லநின்றான்
இம்மாண் கதைக்கோ ரிறையா யவிரா மனென்னும்
மொய்ம்மான் கழலோற் றருநல் லறமூர்த் தியன்னான் ”

—கம்பராமாயணம்-அரசியற் படலம்—1.

3. குற்றக் காகான் களவை யொருசீர் குழுவிப்பின்
முற்றக் கடையோர் நெடிலெய் திநிம்வெண்
[டளை முற்றும்
பற்றக் குறியாய் பனைமா முலைவெம் பணவல்குற்
கற்றைக் குழலார் கருநீள் நயனக் கனிவாயே.

(இ-ள்) நான்கு மாத்திரையளவுள்ள வைந்து சீர்கூடிப் பின்னிறுதியில் முடி வெய்த ஓர் நெட்டெழுத்தைப் பொருந்தும் முற்றும் வெண்டளையிற் கூடும். அதைக்குறி கொள்க.

குறிப்பு:—இதற்கு உதாரணம்

"பட்டா புயிர் நீ படுமா றிலவேற் பகர்மானங்
கெட்டா யிதனிற் றுணிபொன் றின்மேற் கிடையாதாற்
பொட்டா முரையென் புகல்வா யிதுவும் புகலென்றான்
பட்டாங் குனைமுன் னவனென் றதனு லறிவித்தேன்.

நல்லாப்பிள்ளை பாரதம் - சயிந்தவச் சருக்கம். 34.

நான்கு கூவிளச்சீர்களும் நான் மாத்திரையாக ஆறுமாத்திரைத் தேமாங்காய்ச்சீர் அந்தத்தில் வர இவ்வகைச் சந்தக்கலித்துறை யமைதலுமுண்டு:—

ஓர்பக னீர்நிறை பூந்தட மென்றுறு பூக்கொய்வாவ
சீர்தகு திண்கரி சேறலு மங்கொரு வன்மீனம
நீரிடை நின்றுவெ குண்டடி பற்றிநி மிர்ந்தீர்ப்பக்
காரொலி காட்டிய கன்கரை யீர்த்தது காய்வேழம்

காஞ்சிப்புராணம் - புண்ணியகோடீசப் படலம் 10.

4. முன்னே தேமா பின்னது தேமா மொழிமூன்றில்
துன்னுஞ் சீரே கூவிள நான்கிற் றுறுதேமா
பொன்னே யைந்திற் புல்லிய சீரே புளிமாங்காய்
சொன்னார் பேரே மத்தம யூரத் தொடர்பென்றே.

(இ - ள்.) முதற்சீர் தேமா, அதற்குப் பின்னுள்ளதும் தேமா, சொல்லுகின்ற மூன்றாமிடத்திற் பொருந்துஞ் சீர் கூவிளம் நான்கில் நெருங்குகின்ற தேமா ஐந்திற் சேருகின்ற புளிமாங்காய்* இப்படி வருமானால் மத்த மயூர விருத்தமென்று அதற்குப் பெயர் சொன்னார்.

நான்கு மாத்திரைச் சீர்களாலாகும் சந்தக்கலித்துறை முன்னும் பின்னும் சொல்லப்படுவதால் இவ்விருத்தத்திற்கு சொல்லப்பட்ட தேமா, கூவிளச் சீர்கள் நான்கு மாத்திரை யளவினவென்பது கூறாமலே யமைகின்றது.

குறிப்பு:—இதற்கு உதாரணம்.

"காரேய் மேனிக் கண்டகர் கண்டப் படுகாலை
ஆறே வென்ன விண்படர் செஞ்சோ ரியதாகி
வேறோர் நின்ற வெண்மணி செங்கேழ் நிறம்விம்மி
மாறோர் வெய்யோன் மண்டில மொக்கின் றதுகாணீர்."

—கம்பராமாயணம்-யுத்தகாண்டம்-வானரர்களங்காண்படலம்.21.

இதில் முதற்சீர தேமாவுக்குப் பதிலாய்ப் புளிமாச்சீரும் கம்பர் இப்படத்தில் பயன்படுத்தல் காண்க. இதன்றியும், முதற்சீர் கூவிளமாயும் ஏனைய மேற்கண்ட விதிப்படியும் வருதலுமுண்டு. உதாரணம்.

மந்தர மன்னல் திண்புயன் வைவேன் மதிமன்ன
னிந்திர தூய்ம னென்ப வனுலகீ ரேழுந்தன்
சிந்தையி னுஞ்சந் தம்பெற வேசெங் கோலோச்சிக்
கந்தர வாகன் றன்புவி கண்டான் கடைநாளில்

—நல்லாப் பிள்ளை பாரதம்.

---

* "அன்னே னேவுவ் மெய்ப்பணி யாற்று மன்புந்த
தன்னே ரில்லா வோர்மத வேழந் தானெய்தி
யென்னு யகனே யென்பணி கொள்வாய் யென்றேத்தி
பொன்வா டோன்று முன்னமொ ழுந்து புனலாடி."

—காஞ்சிப்புராணம் புண்ணியகோடீசப் படலம். 9.

5. குற்றமி ராவெிற கூவிள
மைந்தொடு கூடியநேர்
பெற்றம ஸ்வக திப்பெய
ரென்றனர் பெரியலோர்
சிற்றிடை முற்றிழை மைந்ய
ணக்கனி சேயிதழும்
பொற்றித லைப்பொலி பூண்முலை
யேந்துபொ லங்கொடியே.

(இ - ள்.) குற்றெழுத்தீற்றுக் கூவிளமைந்தோடு நேரசையைக் கொண்டு முடியுமஸ்வகதி விருத்தமென்று சிறந்த இலக்கணங்களை யறிந்தோர் சொல்லினர்.

குறிப்பு:—இதற்கு உதாரணம்:—

கொட்டுவ ரக்கரை யார்ப்பது தக்கைகு றுந்தாள
விட்டுவ(ர்) பூதங்க லப்பில ரின்புக ழென்புலவின்
மட்டுவ ருந்தழ(ல்) சூடுவ(ர்) மத்தமு மேந்துவர்வான்
தொட்டுவ ருங்கொடி தோணிபு ரத்துறை சுந்தரரே.

சம்பந்தர்—திருபுரமபுரம்—மொழிமாற்று—பண்—
வியாழக் குறிஞ்சி—5.

இதில் (ல்), (ர்), என்பன ‘வறியாரெனவல் லொலியோங்கலிலாக், குறியே யெறியப்படுகொள் கையதே’ என்னும் விதியால் இம்மெய்யெழுத்துக்கள் குறியை யடுத்துவரினும், அவற்றை நெடிலாக்கா—“விளமது வருமென விதித்த வீட்டினில் விளமது கொண்டிலாக் காயை” வேண்டுவது இயல்பாகும்.

5-6 சீர்ப் புளி மாங்காய்க்குப் பதிலாய் தேமாங்காயும் வருவதுண்டு. 1-2-ம் சீர் புளிமாவாயும் வருவதுமுண்டு.

'பெற்றுமஸ்வதி' யென்பது 'பெற்றிடு மஸ்வதி' யென்று திருத்தப்படின், சூத்திரம் குற்றமற்ற உதாரணமாகும். இன்றேல் "ஸ்" என்பதை "இஸ்" எனக் கொள்ளின் "ஸ்வக" என்பது கூவிளமாகும்.

6. நீளாத வுயிரீற்று ளைந்து மாங்காய்பி னீடக்கரத்
தாளாளு திக்திட்ட மாங்காய்க்க லிக்காய சந்தத்துறை
யாளாத கவியல்ல வழகார்ப சுங்கிள்ளை யனமேயெனும்
வாளாய மைக்கண்ண டங்காமு லைக்குன்று மடமங்கையே

(இ - ள்.) குற்றெழுத்தாகிய இறுதியையுடைய வைந்து மாங்காயு மதன் பின்னரொரு நெட்டெழுத்துமுடைய பாதத்தினு லுண்டாகு மாங்காய்ச்சீர்ச் சந்தக்கலித்துறை புலவராலாளப்பட்ட விருத்தமேயாம். (எ - று.)

குறிப்பு—உதாரணம் :—

"பூபால ரவையத்து முற்பூசை பெறுவார்பு றங்கானில்வாழ்
கோபால ரோவென்று றுத்தங்க திர்த்துக்கொ தித்தோதினன்
காபாலி முனியாத வெங்காம னிகரான கவினெய்தியேழ்
தீபால டங்காத புகழ்வீர கயமென்ன சிசுபாலனே"

—நல்லாப்பிள்ளை பாரதம்-இராச சூயயாகச்சருக்கம்—134

7. நாலொரு மாத்திரை யளவிற் றேன்றிய நாலிருசீர்*
பாலற வினையாப் பாடினர் பலதீந் தமிழோரென்
றூலது கலவைச் சந்தத் துறையென் றறைகிற்பாய்
பாலது புரையும் பாய்மன மிளகும் பனிமொழியே.

---

* எட்டு சீரென்பது எட்டு வகையில் காட்டக்கூடிய தேமா, புளிமா, கூவிளம் கருவிளங்களாம் ஒற்றையடுத்தகுறில், நெடில் இவற்றால் இரட்டித்து ஆசிரியர் இவ்விதியிலுள்ள சீர்களால் விளக்குகின்றார்.

(இ - ள்.) நான்கு மாத்திரை யளவினாலுண்டாகிய எட்டுச் சீர்களைப் பேதமின்றிப் புணர்த்திப் பல மதுரமான தமிழ்க்கவிகள் பாடினாரென்றாலதைக் கலவைச் சந்தத்துறையென்று கூறுவாய்.

**குறிப்பு—உதாரணம்:—**

கையால் தொழுதுத் தலைசாய்த் துள்ளங் கசிவார்கள்
மெய்யார் குறையுந் துயருந் தீர்க்கும விமலனார்
நெய்யா டுதலஞ் சுடையார் நிலாவு மூர்போலும்
பைவாய் நாகங் கோடல் லீனும் பாசூரே.

—சம்பந்தர்-திருப்பாசூர்-பண்-காந்தாரம்—8.

8. முதலு மூன்றது மாவி னத்தொரு மூன்றெழுத்
துதவு சீர திரண்டு நான்கொரு நான்கெழுத்
துதவு கூவிள மைந்தி லோங்கிய கூவிளம்
மதிநு தற்கலை யல்குல் மாந்தளிர் மேனியே.

(இ - ள்.) முதற்சீரும் மூன்றாவது சீரும் மூன்று மாத்திரை யளவுள்ள மாச்சீராகவும், இரண்டாவதும் நான்காவதும் நான் கெழுத்து அளவுள்ள கூவிளமாகவும் ஐந்தாவதில் நீண்ட கூவிள மாகவும் பெறும். (எ - று.)

9. முக்குறிலினி றறளவு பத்தரைய
தாகிவரு மூன்றினுடனீ
டக்கரமு மற்றொரிரு காயுமுடை
தாளினையு மாய்ந்தறிகவே
மிக்கவரு ரைத்தகவி யாருமென
வன்னநடை மின்னினிடையே
செக்கார விந்தவத னக்கரிய
கூந்தலொளி செய்யதிருவே

(இ-ள்) மூன்று குற்றெழுத்தை இறுதியிலுள்ள வைத்துமாத் திரையள வாகிய வைந்து காய்ச் சீருமொரு நெட்டெழுத்துமுள்ள பாதத்தைப் பெரியோராண்ட விருத்தமாக ஆராய்ந்தறிக. எ-று.

[குறிப்பு:—இதற்கு உதாரணம்:—

கற்பொலிசு ரத்தினெரி கானினிடை மாகடம தாடிமடவார்
இற்பலிகொ ளப்புகுது மெந்தைபெரு மானதிட மென்பர்பு
[விமேல்
மற்பொலிக லிக்கடன்ம லைக்குவடெ னத்திரைகொ ழித்த
[மணியை
விற்பொலிந தற்கொடியி டைக்கணிகை மார்கவரு வேத
[வனமே

—சம்பந்தர்-திருவேதவனம்-திருவிராகம் பண்-சாதாரி-1

மற்றும் திருமங்கை யாழ்வார் பெரிய திருமொழி 5-ம் பத்து-பத்தாந் திருமொழியை நோக்குக.]

10. நீடுயிர்க் கூவிளக் கருவிளச்
சீரினா னேர்ந்தவற் றைத்
பாடுறும் பாவெனப் போற்றினார்
பஃறுறைப் பாவெனுந் தண்
ணீடலைக் கடலையா ரறிவெனுங்
கிரியினா னிலைமருந்தைத்
தேடினா ரண்டரும் பருகவே
தென்மொழிப் புலவரம்மா

(இ - ள்) பல துறைகளுடைய பாவென்னுங் குளிர்ந்த நீண்ட கடலையரிய அறிவென்னு மலையினால்நிலைபெறச்செய்யும்அமிழ்தை தேவரும் புசிக்கக்கடைந்த இனிய தமிழ்ப் புலவர் நீண்டவுயிரீற்ற விளச்சீரினாலுண்டாகும் விருத்தத்தைப் பெருமை தங்கிய விருத்தமாகக் கொண்டார்.

[குறிப்பு:—இத்தகைய விருத்தத்தின் ஏற்றம் சம்பந்தர் பல பதிகங்களிற் காணலாம்:—

வளங்கிளர் மதியமும் பொன்மலர்க் கொன்றையும் வாளரவும்
களங்கொளச் சடையிடை வைத்தவெங் கண்ணுதற்கபாலியார்தாம்
துளங்குநூன் மார்பினர் அரிவையோ டொருபகல் அமர்ந்தபிரான்
விளங்குநீர்த் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே
-சம்பந்தர்-திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும்-பண்-சாதாரி

11. ஐந்துயிர்க் காயொடு மைந்துயிர்
விளத்தோடு மைந்திடத்தே
யைந்தினே டிரண்டுபெறு காய்கனிச்
சீரொடு மாகு மன்றே.

(இ - ள்) ஐந்து மாத்திரைக் காய்ச்சீராலும், விளச்சீரா லும், ஐந்தாமிடத்தில் ஏழு மாத்திரைக் காய்ச்சீராலும் கனிச் சீராலுமாகும். (எ - று.)

குறிப்பு:—உதாரணம் (ஐந்துகாயும் அந்தத்தில் நெடிலும் வருவதற்கு)

"மாடகமு றுக்கியிசை பாடுமுனி நீடுபிணி மாற்றுமுறைமை
காடியுரை செய்தலும கிழ்ந்துகழன் மன்னவன யர்ந்துபணியா
கூடியகல் லன்பினது கூறுவன ருந்தவக தமபககரில்
பீடுறவி ருந்தபெறு மானவையவர் பூசனைகள் பேணினர்களே.
—விநாயக புராணம் - இந்திரன் சாபம்பெற்ற படலம்-1.

12. கேரொன்று காயு நிரையொன்று நேருமுதலீ
றீரொன்றோ டொன்றி னிறையொன்று காய நியலு
நேரொன்று நேரி னிகழ்வாமி குந்த விடமே
வாரொன்று கொங்கை மதிபோன்றி லங்கு நுதலே.

(இ - ள்) முதற்சீரும் கடைச்சீரும் தேமாங்காய்ச்சீர் புளி மாச்சீராகும். மூன்றில் புளிமாங்காய்ச்சீர் பயிலும்; மற்ற இடங் களில் தேமாச்சீர் வரும். (எ - று.)

**குறிப்பு:**—பின்வரும் உதாரணம் இவ்விதிக்குச் சிறிது மாறு பட்டிருப்பினும் இவ்வினமென்றே கொள்க:—

*தேரோடு சென்ற வசுரன்ம கன்சே ணின்மீண்டு*
*பாரோடு சேர்வான் வருகின்ற பரிசு நோக்கிக்*
*காரோடு வானத் தவறாற்று ழிக்கா மர்தாருத்*
*தூரோடு காய்ந்து மறிகின்ற தோர்தோற் றமொக்கும்.*

—கந்தபுராணம்.

இதில் முதலடியிலும் மூன்றாமடியிலும் ஈற்றுச்சீர் புளிமாவுக்குப் பதிலாய் தேமாங்காய் வந்ததும், இரண்டாமடியில் நான்காஞ்சீர் புளிமாவாயும் ஐந்தாஞ்சீர் தேமாவுமாய் வந்தமையால், மாத்திரை யளவு மாறாமல் இசையில் இவ்வினத்தோடொப்பது காண்க.

## ஒன்பதாம் படலம்

### அறுசீர்ச் சந்த விருத்தம்

1. மூன்றெ ழுத்தி னாறு சீரு முற்றெ ழுத்துமே
தோன்று மோரா டிக்கு நண்ம ருங்கு தொண்டையே
போன்றி லங்கு செய்ய வாய்ப்பு லம்பு பொற்றொடி
வான்ற யங்கு மிந்து வாண்மு கப்பொ லன்கொடீ!

(இ - ள்) மூன்று மாத்திரையளவுள்ள ஆறுசீரும் ஒருசொட் டெழுத்து மோரடிக்குத் தோன்றும். (எ - று.)

**குறிப்பு:**—இதற்கு உதாரணம்.

*மரண சோக நரக வாதை பிணிம யக்கிளே*
*டரண மான விருளை வாம கன்ற நீரராக்*
*கரண நான்கு புலன்க ளோடு மனது கைப்படிற்*
*சரண டைந்து ளாரு முத்தி சார்வ(ர்) திண்ணமே.*

—நல்லாப்பிள்ளை பாரதம் - கிருஷ்ணார்ச்சுன சம்வாத சருக்கம் 49.

2. குறையாப் புளிமா விருமூன் றுகடைக்
குறியாக் குறிலொன்றே
யுறையா வருமா லொளிவாண் முகமைக்
குழலா ரொருமாதே.

(இ - ள்) நீண்ட புளிமாச்சீர் ஆறும் கடையில் நெட்டெழுத்தொன்றும் பொருந்திவரும். (எ - று.)

**குறிப்பு**:—பின்வரும் உதாரணம் இவ்விதிக்கு சிறிது மாறுபட்டிருப்பினும் இவ்வினத்தைச் சேர்ந்ததாகும்:—

"அதிர்பொற் கழலான் விழுதிண் கிரியா லதிசூ ரன்மானதேர்
பிதிர்பட் டிடலும் புவிமேற் படர்தல் பிழையா மெனவுன்னு
உதயக் கிரிபோற் கனகத் தியலு மொருதேர் மிசைநீலக் ·
கதிருற் றெனவே கடிதிற் பாய்ந்தான் காலன் மிடறீர்ப்பான்.

—கந்தபுராணம்.

3. குற்றுயி ரீற்றறு கூவிளை யோடொரு
நெட்டுயர் கூடிமால்
பொற்றளிர் மேனிய ருங்குவ ளைக்கணி
லங்குறு பூங்கொடியே.

(இ - ள்) குற்றுயிரீற்றிலுடைய ஆறு கூவிளச் சீரோடு நெட்டெழுத்து கூடுமென்றவாறு.

[குறிப்பு - உதாரணம்.

"மீட்டுமி ரும்படை மேவநெ டுங்கணை விட்டுவி ழன்வழியில்
மாட்டிவ ழக்கம றத்தல கெங்கும லிந்தவு டற்குறையின்
ஈட்டம திக்துக னன்றுவி ழிப்பவெ ரிந்தவு டற்பெருகுதி
ஓட்டமு சோரிவ றந்தது சூரனெ ருத்தனு ஙின்றனனே"

—தணிகைப் புராணம்—

4. நாலக் கரவிளை யொடுமா விறுதியி
லொருகாய் நடைபெறுமால்

தாலக் கனிமுலை நீலக்குழலொரு
சாலத் தனுவிடையே

(இ - ள்) நான்கெழுத்தளவுள்ள விளச்சீரும், மாச்சீரும், கடையி லொருகாய்ச்சீரும் நடக்கும். ஏ - று

[குறிப்பு - இதற்கு உதாரணம்:—

(நால் மாத்திரை மாச்சீர்களாலமைவதற்கு)

"மஞ்சைப் போழ்ந்த மதியஞ் சூடும் வானோர் பெருமானார்
நஞ்சைக் கண்டத் தடக்கும் அதுவும் நன்மைப் பொருள்
[போலும்
வெஞ்சொற் பேசும் வேடர் மடவா ரிதணம் அதுவேறி
அஞ்சொற் கிளிகள் ளாயோ வென்னும் அண்ணா மலையாரே"

சம்பந்தர்-பண்-தக்கேசி.

(நான் மாத்திரை மாச்சீர்களும் விளச்சீர்களும் கலந்து வருவதற்கு)

"இறைவனெ ழிற்கதிர் மணிகளி ழைத்திய
தவிசினி ருத்தலுமே
நெறிகெழு நெறிக்கொடு நிலவனை யிற்புக
நெடியவ னப்பொழுதே
மறலிபெ னத்தகு திருபணி யற்றிய
விரகைம னத்துணரா
முறுகுசி னத்துட னடிகள் பிலத்துற
முடிகக னத்துறவே"]

5. காய்விளம டுத்தவொரு சீர்விளமி றுத்தகனி
காமுறவு தித்தியலுமால்
வேய்புரைத ணைக்காமு மாந்தளி ரெனத்திகழு
மேனியுமு டைச்சுரிகுழல்
காய்விளம டுத்தவொரு வைந்திறமி டத்தினது
காணுறுநெ டிற்கடையெனப்

பாய்புனலு டுத்தவுல கோரிதனெ ழுத்தளவு
பாங்குறவி தித்தனரரோ

(இ - ள்) விளத்தை யடுத்த காய்ச்சீர்களும் விளமானது கொண்டு முடிந்த கனிச்சீரும் தோன்றியினிதாய் நடக்கும். விளத்தை யடுத்தனவாகிய காய்ச்சீர்களுக்கு மாத்திரை ஐந்தாம். கடைச்சீர் ஐந்து மாத்திரையோடு கடையில் நெட்டெழுத்துளதாய்க் காணப்படுமென்று அலைகின்ற கடல் சூழ்ந்த வுலகத்தோரிதற்கு எழுத்தளவு விதித்தாரென்க.

விளமடுத்த காயெனவே விளங்காயென்பதும், விளமிறுத்த கனியெனவே விளங்கனி யென்பதுங் கருத்தென்க. விளங்காய்க்கு மாத்திரையைந்தென்றமையால், மூன்று குறிலீற்று விளங்கா யென்பதும், எழு மாத்திரை விளங்கனி யெனவே, மூன்று குறிலுமதற்குப் பின்னரோர் நெட்டெழுத்தும் உடைய விளங்கனி யென்றதும், பெறப்பட்டது. நெட்டெழுத்தேயன்றிக் குற்றெழுத்தும் இக்கனிச் சீரந்தத்தில் வருமேயெனின்" அந்தந் துறை குன்றியவக்கரமே, சந்தத்தி னீடுயிராஞ் சமமாய் என்னும் விதிப்படி, அக்குறிலும் நெடிலெனவே கொள்க. ஐந்து மாத்திரை விளங்காய்ச்சீர் ஐந்துவருமென்பது உதாரணத்தாற் காண்க.

[குறிப்பு - இதற்கு உதாரணம்

"வாவியொரு தேரைவடி வாளிபொழி யக்கனகன்
வார்குருதி சோரவுடலின்
மேவினனெ டுத்திரதம் விண்ணிடையு கைத்தனன்வி
ளங்குதிற னீலனவுனன்
தாவியொரு தேர்புகவ ரக்கடிநெ ழுந்துதட
மார்பிறவெ ருக்கிவரதன்
பாவிநில னிற்படயி தித்தனனு ருட்டபுப
ழங்கண்மிகு வித்தனனரோ"

—தணிகை புராணம்.]

6. கள்ளூறு போதோக டுங்காம னம்போக ருங்கால
[ஞேவன்றெனி
னள்ளார்ந டுங்கத்த னிச்சூர னேயேந்து காமப்பு
[லால்வேல்கொலோ
ஒள்ளார்க டித்தாம ரைத்தேன ருந்துங்க ரும்புள்ளொ
[ளத்தக்கவோ
டௌ்ளூறு காமக்கோ டுந்தீம் ருந்தேயோ ளிர்கார்கி
[றக்கண்களே.

(இ - ள்.) இவ்விருத்தம் குறிலீற்று மாங்காய்ச் சீரினுல் தோன்றினமை காண்க.

குறிப்பு:—இதற்கு உதாரணம்

"என்னுமவே முன்பு கடலுண்ட தேபோல
வெனதானு முண்டகொடியோ
னுண்ணும் முயிர்கொண்டு வலிகொண்டு குதிதான
வுதிரங்கி ழித்துவருவ
னண்ணுவில் வலனேயெ னக்கூறி யேதம்பி
யரிபோன்று முங்கியிட்டும்
மண்ணுடர் புகழ்குப்ப முனிதீயர் செய்திட்ட
மாயந்தெ ரிந்துவெகுள்வான்
—"கந்தபுராணம்." வில்வலன் வாதாவி வதைப் படலம் 30.

இத்தகைய விருத்தங்களில் 6-ம் சீர் கனிச்சீராய் நிகழும்; அல்லது காய்ச்சீருடன் ஒரு நெடில்புணர்பு மென்றுணர்க.]

7. ஓதவார் கடலகத் துற்றவா ரம்முதெனு
வோதினர் புலவர்மற்றுந்
தீதிலாத் தீங்கனிச் சுவையெனப் பாலெனத்
தேமொழிக் குவமை சொன்னார்

ஏதமே புலனுறு வழிநினைப் பாலவை
யின்பமே நல்கிலாவால்
யாதெனக் கூறுகே னின்மொழிப் பண்பைநா
னேக்கிழைப் பொற்கொடிக்கே.

(இ - ள்.) இவ்விருத்தம் ஒற்றடுத்த குறிலேயேனும் நெட்டெழுத்தையேனு மிறுதியிலுடைய விளச்சீர்களால் வந்தது.

குறிப்பு:—நீண்ட விளமாயின் மாங்காய்ச் சீருக்கு பதிலாகும். விளம்நீளாது வருவதுமுண்டு. இதற்கு உதாரணம்:—

"அரம்பையு ருப்பசி மேனகை முதலிய
வரிமதர் விழிமடவார்
நிரம்பிய காமந லங்கனி யவிநய
நெறிமுறை நரமசையப்
பரம்புமி டற்றிசை விம்மிட விழியிணை
புடைபெயர் பயில்வினொடும்
வரம்பெற மற்புத மின்னவிர் கொடியென
மகிழ்நட மெதிர்புரிய".
—காஞ்சிபுராணம் திருநெறிக்கரைக் காட்டுப் படலம்.

8. ஓதியவு டம்பதணை யாதகுறி லீறொன்ற
றொழிகூவி ளக்கருவிளச்
சாதியென நடுமெய்ம்மி காவிளங் காயெனத்
தனிவந்த குறிலீற்றகாய்
பேதமென வருமைந்து மாத்திரைச் சீர்களும்
பின்னோர்கெ டிற்பெற்றவும்
மேதகுவி ருத்தமென வான்றமிழ்ப் புலவருள
வேண்டினா றிந்துமாதோ

(இ-ள்) சொல்லிய ஒற்றையடுக்காத குறிலாலாகிய இறுதியைப்பெறாத கூவிளக் கருவிளச்சீர்களும், நடுவே யொற்றுமிகாத

விளங்காய்ச் சீர்களும், தனிக்குறிலீற்றுக்காய்ச்சீரின் பேதங்களும் ஆகிய இந்த ஐந்து மாத்திரையுடைய மூவிதச் சீர்களும் ஈற்றில் இவைகளை யொற்றடுத்த சீர்களும் வரும் விருத்தத்தை யதன் பெருமை யறிந்து உயர்ந்த தமிழ்ப் புலவர் சிறப்புற்ற விருத்தமாக மிகவும் பாடினர் எ - று.

எனவே நெடிலேனும் மெய்யேனு மிறுதியடையப் பெற்ற விளச்சீர்கள் (1) மூன்று குற்றெழுத்தால் முடிந்த விளங்காய்ச் சீர்கள் (2) குறிலீற்று மாங்காய்ச் சீர்கள் (3) ஆகிய இம்மூன்று வகைச் சீர்களும் ஐந்து மாத்திரை யாகலான், முதலேந்திடங்களில் வரத்தக்கன. இறுதியாறுவது சீராக வருவன எவையெனின் ஒரு நெடிலை யீற்றிற்பெற்ற எழுமாத்திரை யளவுள்ள இம்மூவகைச் சீர்களேயாம். அவையாவன:—

(1) மெய்யெழுத்து நடுவே யிருந்த விளங்காய்ச் சீர்களும்,
(2) மூன்று குறில் நடுவே பெற்ற விளங்கனிச் சீர்களும்
(3) மாங்கனிச் சீர்களும் ஆம்

(உ-ம்.) “ சிலைக்குருவி றற்குருகு லக்குமரு ருக்குவரு
சிரமீலை காண்மினெனவே
யலைக்கிலெ வாவெழுச ரிற்புதல்வ னுக்குதல்
லறக்கடவு ளுக்குமுறையா
னிலைப்படுவி லாசமணி யணிதிகழு ரங்கி(ன்)மிசை
நிகழ்பலிகொ டுத்தரியுடன்
கலைப்புரவி யூர்திருவை யுக்தொழுது புக்கனன
கத்துணர்வு மிக்ககலை யோன் ”

—நல்லாப்பிள்ளை பாரதம் - நாராணுதைச் சருக்கம் - 66

9 ஆந வாரிநெடி லக்கர முக்குறி
வாகுஞ் சிறகாயே
நோதி லன்னடையது குற்றுயீ ற்றிரு
கூவார் விளமென்றே

போது மூன்றது டொன்கது மோங்கிய
தேமா புளிமாங்காய்
சீத வெண்மதிமு கக்கரு நீள்விழி
பின்னோர் திருமாதே.

(இ - ள்.) முதற்சீர் (குற்றியிசீற்றுத் தேமாவாகிய) வாழிச் சீரென்றும், கெட்டெழுத்தொன்றாலும் மூன்று குற்றெழுத்தாலு மாகிய சிறிய கூவிளங்காய்ச் சீர் இரண்டாவதென்றும், மூன்று வதும் நான்காவதும் குறிலீற்றுக் கூவிளமென்றும் ஐந்தாவது (நெடிலீற்றுத்) தேமாவென்றும் ஆறாவது புளிமாங்காயென்றும் சொல்லுக. (எ - று.)

அடியில் வருந் தேவாரங்களுமிவ்வினத்தவாம்:—

"தோடுடையசெவி யன்விடை யேறியோர் தூவெண் மதிசூடி
காடுடையசுட லைப்பொடி பூசியெ னுள்ளங் கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்த வருள்செய்த
பீடுடையபிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே"

இதில் "டையசெவி", "டையசுட", "டையமல", "டைய பிர" என்பவற்றை ஐகாரத்தை நீட்டி கூவிளங்காய்ச் சீர்களாகக் கொள்க.

"நாணு தல்செய்திறை நாணிய மாவொடு தண்டா மறையானும்
பேணு தல்செய்தொழி யக்கியிர்க் தானென துள்ளங் கவர்கள்வன்
வாணு தல்செய்மக ளிர்முத லாகியவையத் தவரேத்த
பேணு தல்செய்பிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே"

இதில் "தல் செய்திறை", "தல் செய்தொழி", "தல் செய்மக", "தல் செய்பிர" என்பவற்றை யகரத்தை நீக்கிக் கூவிளங் காய்ச் சீர்களாகவே கொள்க.

## பத்தாம் படலம்

### எழுசீர்ச் சந்த விருத்தம்

1. வாங்க ருங்கு ணத்த வேழு வாழி யோடு நெட்டெழுத்
தீங்கு றுஞ்சு கந்தி மற்று மேற்கு மாவி யல்புளி
தீங்க ரும்பொ டமுது தேன்பொ திந்து செய்ய செப்பையுங்
கோங்க ரும்மை யுந்தொ லைத்த குவிமு லைப்பெ தும்பையே.

(இ-ள்) வளைத்தற்கரிய குணத்தை யுடைய வாழியென்னும் வாய்ப்பாட்டுக் குறிலீற்றுத் தேமாச்சீரேழினோடு கடையில் நெட்டெழுத்தையும் சுகந்திவிருத்தம இவ்விடம் பெறும். புளிமாச்சீரையும் பெறும் எ-று.

புளிமாச்சீரென்பது குற்றெழுத்தீற்றுப் புளிமாவென்க. புளிமாச்சீர் கலந்து வருகையில் உத்சாக மென்னும் நாமத்தைபெறும். முதலிரண்டடியும் சுகந்திக்கு உதாரணமாகவும், பின்னிரண்டடியும் உத்சாக விருத்தத்திற்கு உதாரணமாகவும் கொள்க.

[குறிப்பு:—சுகந்திக்கு உதாரணம்:—

" நமசி வாய மைந்தெ ழுத்து நிற்கு நன்னி லைகளும்
நமசி வாய மைந்தி னோடு கூடு மவ்வெ ழுத்தையும்
நமசி வாய மைந்து பூத நாத மான வற்றையும்
நமசி வாய வுண்மை யைந மக்கு ரைசெய் நாதனே

—சிவவாக்கியார்.

உத்சாகத்திற்கு உதாரணம்:—

"வெயிற்கெ திர்ந்தி டங்கொ டாத கங்கு ளிர்ந்த பைம்பொழில்
துயிற்கெ திர்ந்த புள்ளி னங்க(ள்)* மல்கு தண்டு ருத்தியாய்
மயிற்கெ திர்ந்த ணங்கு சாய(ல்)* மாதொ(ர்)*பாக மாகவு
மெயிற்கெ திர்ந்தொ ரம்பி னாலெ ரித்த வில்லி யல்லையே

—சம்பந்தர்

கந்தபுராணம் காமதகனப்படலம் செய்யுள் 54-ம் பின்னுள்ளவையும் நோக்குக]

---

* (ள்), (ல்), (ர்), என்னும் மெய்யெழுத்துக்கள் "வறியாரனவல் லொலியோங் கலிலா குறியே யெறியப் படுகொன் கையதே" என்னும் விதியால் மாத்திரை யுயர்ச்சி தாராவாம்.

2. கூவிள மேழுகு லாவநெ டிற்கடை
கொள்வது மானினி நேரசைசே
ராவிள மாதிந டப்பது பேர்கவி
ராசவி ராசித மென்றனரால்
கூவிள மேகரு வார்விள மேயிவை
கூடுவ சாத்துவி காசலவும்
பூவிள வெம்முலை யாமழு தாரிரு
பொற்குட மேந்துபொ லன்குழையே.

(இ - ள்) ஏழு கூவிளச்சீர்கள் அழகாகப் புணரக்கடையில் நெடிலைக்கொள்வது மானினியாகும். நிரையசையாதியாகிய விளம் (கருவிளமென்றபடி) முதற்கண் நடப்பதின் பெயர் கவிராச விராசிதம் என்று சொல்லினர். கூவிளச்சீர் மூன்றும் கருவிளச்சீர் பின்னுமாகக்கூடும் விருத்தங்களின் பெயர் சாத்துவியாகும்.

கவிராச விராசிதம், சாத்துவி இவைகளுக்குதாரணம் வந்தவிடத்திற் காண்க.

குறிப்பு:—மேற்கூறிய விதியே மானினிக்கு உதாரணமாம். கவிராசவிராசிதத்திற்கு உதாரணங் காண்க.

கொடிகளி டைக்குயில் கூவுமி டம்மயி
லாலுமி டம்மழு வாளுடைய
கடிகொள்பு* னற்சடை கொண்டநு தற்கறை
கண்டனி டம்பிறைத் துண்டமுடிச்
செடிகொள்வி* னைப்பகை தீருமி டந்திரு
வாகுமி டந்திரு மார்பகலத்
தடிகளி டம்மழல் வண்ணனி டங்கரிக்
கச்சியி னேகதங் காவதமே.

—சுந்தரர் தேவாரம்.

* "கடிகொள்பு", "செடிகொள்வி" என்னும் புளிமாங்காய்ச் சீர்கள் கருவிளத்திற்கு பதிலாய் வந்தன ("விளமது வருமென விதித்த வீட்டினில், விளமது கொண்டிலாக்காயும் வேண்டுவர்" என்னும் விதிப்படி யமையுமென்றறிக.

3. ஒருநான் கிரண்டோ டிருமூன் றிடத்தி
லொருநேர் முனைந்த சிறுமா
புரைநீங்கு மற்ற முதலைந்து மூன்று
புளிமாவி னைந்த சிறுகா
யொருநான்கு மூன்று புளிமாவ ளைந்த
ஒருவாரி லங்கு முதலே
வரினை யிதற்கு வடசொற்க வீசர்
மணிமால மென்று சொலுவார்

(இ - ள்) நான்கு, இரண்டு, ஆறு ஆகிய இந்த விடங்களிற் குறிலீற்றுத் தேமாவும், குற்றம் நீங்கிய முதல், ஐந்து, மூன்று ஆகிய இடங்களில், குறிலீற்று புளிமாங்காயும், ஏழாமிடத்தில் புளிமாவும் வந்தால் அதற்கு வடமொழியாசிரியர் மணிமால மென்னும் பெயரைச் சொல்லுவார்.

**குறிப்பு:**— இதற்கு உதாரணம்.

"துளிமண்டி யுண்டு நிறம்வந்த கண்ட
னடமன்று துன்று சடையோன்
ஒளிமண்டி யும்ப ருலகங்க டந்த
வுமைபங்க னெங்க ளரனூர்
களிமண்டு சோலை கழனிக்க லந்த
கமலங்க டங்கு மதுவில்
தெளிமண்டி யுண்டு சிறைவண்டு பாடு
திருமுல்லை வாயி லிதுவே" —சம்பந்தர்.

4. கந்து கின்றசி லம்பு மேகலை
கார்கு றுங்களி வண்டுநா
லொத்த மெல்லிடை நண்ணி தென்றிறை
யுள்ள ளிரு கொங்கைகாள்

இத்த கைத்தெழு சீரி யங்குமி
லங்கெ ழிற்கவி தோன்றிடின்
மத்த கோகில மென்று மூதறி
வோர்வ ழங்கினர் நாமமே.

(இ - ள்) இத்தன்மையான எழுச்நுள்ள விளங்குகின்ற அழகான விருத்தம் தோன்றினல் மத்த கோகிலமென்று பேரறிவோர் நாமம் வழங்கினர். (எ - று.)

இதன் விதியை இவ்வுதாரணப் பாட்டாற் காண்க.

**குறிப்பு:**—இவ்வுதாரணத்தால் ஏற்படும் விதியாதெனில் குறிலீற்றுத் தேமாகூவிளச் சீர்கள், முறையே மூன்று தடவை வரப்பெற்று, அந்தத்தில் நெடிலீற்றுக் கூவிளமொன்று அமையப் பெறுதலாகும். இதற்கு உதாரணம்.

வாயி டைம்மறை யோதி மங்கையர்
வந்தி டப்பலி கொண்டுபோய்
பேயி டம்மெரி கானி டைப்புரி
நாட கம்மினி தாடினன்
பேயோ டுங்குடி வாழ்வி னன்பிர
மாபு ரத்துறை பிஞ்ஞகன்
தாயி டைப்பொருள் தந்தை யாகுமென்
றோது வார்க்கருள் தன்மையே.

—சம்பந்தர்-பண்-கொல்லி-5

தேமாவும் கூவிளமும் மும்முறை மாறி அந்தத்தில் நீண்ட கூவிளம் வருவதற்கு பதிலாய், புளிமாவும் கருவிளமும் மும்முறை வர அந்தத்தில் நீண்ட கருவிளம் வருஞ் சந்த விருத்தங்களுள:—

**உதாரணம்:**—

இனியின் றெழிமினில் வெறியும் மறியம்
தொழிலும் மிகுகுரை யையுமெல்லாம்

கனிசிந் தையினிவள் மிகவன் புறவதொர்
நசையுண் டதுகரை முதுபெண்டிர்
புனிதன் புகலிய ரதிபன் புனைதமிழ்
விரகன் புயமுறு மரவிந்தம்
பறிமென் குழலிமை யணிமின் துயரொடு
மயலுங் கெடுவது சரதம்மே.

—நம்பியாண்டவர் நம்பி - ஆளுடைய பிள்ளையார்
திருக்கலம்பகம். 22.

இவ்வாறு நேரசை வருமிடங்களில் நிரையசை வந்த முற்றும் மாறுதலான பாக்களும், சிலவிடங்களிலேயே மாறுதலடையும் பாக்களும் சம்பந்தர் கொல்லிப்பண் பதிகங்கள் சிலவற்றில் காண லாம். இக்கவிகள் மாத்திரையளவைக் கவனித்தே இசையைப் பொருத்தினாரன்றி சீரமைப்பும் யாப்பின் போக்கும் அத்துணை முக்கியமாய் கவனிக்கவில்லை போலும். இவ்வகை விருத்தத்தில் கடைச்சீர் மாத்திரை ஒன்று குறைந்து வருவதுமுண்டு. (உ - ம்)

சயமி குத்தகு கரைமு ருக்கிய தமிழ்ப யிற்றிய நாவன்
வியலி யற்றிரு மருக லிற்கொடு விடம ழித்தருள் நீதன்
கயலு டைப்புனல் வயல்வ ளத்தகு கழும லப்பதி நாதன்
யலு டைக்கழல் தொழுதி னைப்பவ ரிருவி னைத்துயர் போமே.

இதில் கடைச்சீர் தேமாவாய் நின்றது காண்க.

மற்றும் ஒரு சீர் குறைந்த மத்தகோகிலம் அறுசீர்ச்சந்த விருத்தமாய் வருவதும் காண்க:—

"திங்க ளைத்தலை யாக மன்னவர் செப்பு மாமரபோர்
தங்க ளிற்பகை யாகி வானவர் தான வர்க்கெதிரா
வெங்க ளுக்கெழு பார டங்கலு மென்று போர்புரியும்
வெங்க ளைத்தினி யற்கை யெங்ஙன்வி யந்து கூறுவதே"

—நல்லாப்பிள்ளை பாரதம்-கன்னபருவம் 49

# பதினோராம் படலம்

## எண்சீர்ச்சந்த விருத்தம் *

அழிவறு காய மீட்டி மடமாந்த ருய்ய
வருநூல் மைறந்த பெரியோர்
மொழிதரு சந்த முற்று மியலின்ன தென்று
மொழிவானெ டுத்த லரிதே
கழிபெரு வாரிநீர தனுபற்றி யீங்கு
கழறுற்ற சந்த விதியை
விழியென வைத்து மற்ற மொழியாத சந்த
விதிதம்மை யோர்ந்து கொளலே.

(இ - ள்.) உண்மையறிவில்லாத மனிதர்களுய்யும் பொருட்டு அரிய நூல்களைச் செய்து அழிவில்லாத தேகத்தை யடைந்த பெரியோர் மொழிந்த சந்தங்களெல்லாவற்றிற்குமிலக்கணங் கூறப் புகுதல் அருமை. அது கடலைப்போலும் மிகவும் விரிந்திருக்கிறது. ஆகையாலிவ்விடத்திற் சொல்லிய விதிகளைக் கண்ணாகக்கொண்டு மொழியாதொழிந்த மற்றச் சந்தங்களின் விதிகளைக் கண்டறிந்து கொள்க. (எ - று.)

கூறு தொழிந்த விருத்தங்களைப் பற்றிச் சொல்வதால் இவ் விருத்தமும் முன்கூறாத விருத்தமாகச் செய்யப்பட்டது.

---

* [குறிப்பு:—இவ்விருத்த அமைப்பு விளச்சீர், இரண்டு குறி லீற்றுத்தேமா, குறிலீற்றுப் புளிமாங்காய், குறிலீற்றுத்தேமா, குறி லீற்றுப் புளிமாங்காய் குறிலீற்றுத்தேமா, புளிமா முறையே நிற்ற லாகும். எனவே இவ்விருத்தம் சந்தக் கலிவிருத்த மிரட்டித்தது மன்று. இதை இருகூறாக்கி கலிவிருத்தமாகச் செய்யவுமிய லாது. இவ்வகை எண்சீர்ச்சந்த விருத்தம் "வேயுறு தோளிபங் கன்" என்னும் திருஞான சம்பந்தர் பதிகத்திலும் "வெனொனு மோசை" என்னும் அப்பர் பதிகத்திலும் காணலாம்.]

(1) முதலாவது இந்தவிதியால் முன்காட்டிய சந்த விருத்தங்களிற்பட்டி வருவனவற்றைக் கொள்க - அவை வருமாறு.

“அங்கிங்கெ னாதபடி யெங்கும்ப்ர காசமா
 யானந்த பூர்த்தியாகி
அருளொடுநி றைந்ததெது தன்னருள்வெ ளிக்குளே
 யகிலாண்ட கோடியெல்லாந்
தங்கும்ப டிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்த
 ழைத்ததெது மனவாக்கினிற்
றட்டாம னின்றதெது சமயகோ டிகளெலாந்
 தந்தெய்வ மெந்தெய்வமென்
றெங்குந்தொ டர்ந்தெதிர்வ ழக்கிடவு நின்றதெது
 வெங்கணும் பெருவழக்கா
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
 யென்றைக்கு முள்ளதெதுமேற்
கங்கு(ல)பக லறநின்ற வெல்லையுள தெதுவது
 கருத்துக்கி சைந்ததுவே
கண்டனவெ லாமோன வுருவெளிய தாகவுங்
 கருதியஞ் சலிசெய்குவாம்.”

“பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே
 பாவித்தி றைஞ்சவாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயேயி ருத்தியப்
 பனிமலரெ டுக்கமனமும்
நண்ணே னலாலிரு கைதான் குவிக்கவெனி
 னாணுமென் னுளநிற்றிநீ
நான்கும்பி டும்போத ரைக்கும்பி டாதலா
 னான்பூசை செய்யன்முறையோ
விண்ணேவி ணாதியாம் பூதமே நாதமே
 வேதமே வேதாந்தமே

மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள
வித்தேய வித்தின்முளையே
கண்ணோக ருத்தேயெ ணெண்ணெ மெய முத்தேக
நிக்கான யோனவடிவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணைக க்கடவுளே."

"தாதஞ்சு நாழிகையி லாறுநா ழிகைதனிற்
சொற்சந்த மாலைசொல்லத்
துகளிலா வந்தாதி யேழுநா ழிகைதனிற்
றொகைபட விரித்துரைக்கப்
பாதஞ்செ(ய்) மடல்கோவை பத்துநா ழிகைதனிற்
பரணியொரு நாண்முழுதுமே
பாரகா வியமெலா மோரிரு தினத்திலே
பகரக்கொ டிக்கட்டினேன்
சீதஞ்செ யுந்திங்கண் மரபினு னீடுபுகழ்
செய்யதிரு மலைராயன்முன்
சீறுமா றென்றுசிறு தாறுமா றுகள்சொற்றி
ருட்டுக்க விப்புலவரைக்
காதங்க றுத்துச்ச வுக்கிட்ட டித்துக்க
துப்பிற்பு டைத்துவெற்றிக்
கல்லணையி னொடுகொடிய கடிவாள மிட்டேறு
கவிகாள மேகநானே"

எடாயி ரங்கோடி யெழுதாம றன்மனத்தெ
ழுதிப்ப டித்தவிரகன்
இமசேது பரியந்த மெதிரிலாக் கவிவீர
ராகவன் விடுக்குமோலை
சேடாதி பன்சிரம சைத்திடும் புகழ்பெற்ற
திரிபதகைக் குலசேகரன்

தென்பாலே சேலம்பு ரந்துதா கந்நீர்ந்த
செழியனெ திர் கொண்டுகொண்க
பாடாத கந்தருவ மெரியாத கந்துகம்
பற்றிக்கொ லாதகோணம்
பறவாத கொக்கனல் பண்ணுத கோடைவெம்
படையிற்றெ டாதகுந்தம்
சூடாத பாடலம் பூவாத மரமொடுதொ
டுத்துமுடி யாதசடிலம்
சொன்னசொற் சொல்லாத கிள்ளையென் றெங்கும்து
திக்கவர விடல்வேண்டுமே

இந்நான்கு விருத்தங்களும் 8-வது அறு சீர்ச்சந்தமாகிய "ஓதிய வுடம்பதணையாதகுறில்" என்னும் விருத்த மிரட்டிய பன்னிருசீர்ச் சந்த விருத்தமென்க.

குவளைப் பிழிசெங் குமுதப் பிழிகோ
கனகப் பிழிகூடிக்
கோதறு சேதக மாகிக் கூனற்
கொழுவுறு சீதைதொறுக்
தவளைத் தரளத் தொடுபிழி யுற்றத்
தும்பக் கடைசியர்தம்
தண்ணகை யொடுமித ழூரலொடுஞ்சம
ஞமென வுட்சினவிப்
பவளக் கடிகைப் பேரணி சரிதிகழ்
பங்கய மென்கையாற்
பணிலத் தரளத் திரளைத் திடரிற்
பழனக் கரைதரவே
திவலுற் றிடுதொண் டீரகன் ஞடா
செங்கோ செங்கீரை
சேரூர் போரூர் வீரம யூரா
செங்கோ செங்கீரை*

---

* திருப்போரூர் சன்னிதி முறை - செங்கீரைப் பருவம் 8.

இவ்விருத்தம் 4-வது அறுசீர்ச் சந்தமாகிய "காலக்கர வினையொடுமோ" என்பது இரட்டி வந்த தென்க.

"காரென வாருயிர் மீதரு ளேபொழி
கண்ணனை விண்ணவனைக்
கந்தனை யெந்தையை வந்தனை யன்பர்க
டம்பகை கொன்றவனைச்
சீர்சம ராபுரி யாளனை மாளுறு
தேவர்ம ணாளனை யோர்
சின்மய ரூபனை நன்மையெ லாமுறு
சேயினை யருள்புரிக
வோர்வரி தாமுயிர் யாவையு நேர்வினை
யொத்தும லப்பகைபோய்
ஒண்சுக மேவிட வைந்தொழி றந்திடு
முத்தம சிற்பரமாய்ச்
சேருரு வாயரு வாயிரு வகையுஞ்
செறிபொரு ளாய்நிறைவாய்
செம்முக மைந்தொடு செம்மையி னின்றருள்
செய்த சதாசிவமே. ‡

இதுவும் மேற்காட்டிய விருத்தமேயாம்.

கற்றா ரெனினும் பதினு லுலகம்
கண்டா ரெனினுந் தண்டா மிகுபற்
றற்றா ரெனினுந் திருமா லடியா
ரல்லா தவர்வீ டில்லா தவரே
பொற்றா மரையாள் கணவன் றுயிலும்
பொற்கோ யிலையே புகழ்வார் பணிவார்
மற்றா ரெனினும் பெற்றா ரவரே
வானோர் திருமா மணிமண் டபமே.

‡ திருப்போரூர் சன்னிதி முறை காப்புப் பருவம் 2.

இது நான்கு மாத்திரை மாச்சீரினாலாகிய "வேதப் பொருளார்" என்னும் கலிவிருத்த மிரட்டிய தென்க.

வேட்ட நல்வரம ளித்து விடுக்கும்
வீறி லார்களர்பவர் விண்ணவர் யாட்டும்
வேட்ட நல்வரம னைத்தும்வ ழங்கார்
வேட்ட மாத்திரைவி னைப்பவர் கில்லோர்
வேட்ட நல்வரம ளித்ததன் மேலும்
வேறு நல்வரம்வி னவிய ளிப்ப
வேட்ட வண்ணல்க ருணைத்திற நோக்கி
விம்மி தம்புணரி விம்முழு ளத்தான்.

து சுவாகத விருத்த மிரட்டி வந்ததென்க.

* "தொண்டர் டித்தொழலுஞ் சோதியி ளம்பிறையுஞ்
சூதன மென்முலையாள் பாகமு மாகிவரும்
புண்டரி கப்பரிசா மேனியும் வானவர்கள்
பூசலி டக்கடலுஞ் சுண்டக ருத்தமரும்
கொண்டலெ னத்திகழுங் கண்டமு மெண்டோளும்
கோலந றுஞ்சடைமேல் வண்ணமுங் கண்குளிரக்
கண்டுதொ ழப்பெறுவ தென்றுகொ லோவடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே.

† " மைசிலை நீள்புருவத் தேந்திள வெம்முலையா
யெம்மிடை யெம்மடியார் தம்மிடை யெய்தலுறச்
செய்பிழை யன்றிவருந் தீவினை யேனையெலாஞ்
சீர்வளர் காஞ்சியினிற் றேய்க்குத வம்பெருகி
மெய்திகழ் நாற்பயனு மேவரு நீஇனமால்
வேறுமு னக்கினியென் வேண்டுவ தென்றிடலு
மெய்யொளி மேனியினான் முன்றொழு தேத்தியிள
மூரன்மு கத்தலரப் பேசுத லுற்றனளால்"

* சுந்தரர் தேவாரம்.
† காஞ்சி புராணம்.

இவை 24-வதாகிய 'முன்னது கூவிளமாய்'' என்னும் கலிவிருத்த மிரட்டி வந்தனவென்க. இவைபோலும் மற்ற விருத்தங்க ளிரட்டி வருவனவுங் கொள்க.

(2) இரண்டாவது இந்த விதியால் நேரசையுள்ள சீர் வருமென்புழி, மாத்திரையளவிலொத்த நிரையசையுள்ள சீர் வருவனவும், நிரையசையுள்ள சீர் வருமென்புழி மாத்திரை யளவில் பேதியாத நேரசையுள்ள சீர் வருவனவும், வேறு எந்தச் சீர்க்கேனு மாத்திரையிலொத்த வேறு எந்த சீரேனும் வருவனவுங் கொள்க. அவை வருமாறு.

மண்ணுளார் விண்ணுளார் மாறுளார் வேறுளார்
எண்ணுளா ருளரவர்க் கியலுளா ரிசையுளார்
கண்ணுளா ராயினர் பகையுளார் கழிநெடும்
புண்ணுளா ராருயிர்க் கமிழ்தமே போலுளார் *

ஐந்து மாத்திரைக் கூவிளச் சீரிலாவது சிறக்கினி விருத்தமாகையால் அதற்கு இது சிறிது பேதப்பட்டு 'உளரவர்க்', 'இயலுளார்'', ''பகையுளார்'', ''கழிநெடும்'', ''அமிழ்தமே'' என, நேரசை முதலாகிய கூவிளத்துக்கு நிரையசை முதலாகிய கருவிளச்சீரைக் கொண்டது.

வரையார் தோள்பொடி யாட வைகுவாய்
தரைமே லாயுறு தன்மை யீதெனக்
கரையா தேனிடு பூசல் கண்டுமோன்
றுரையா யென்வயி னூனம் யாவதோ †

---

* கம்பராமாயணம் - நட்புகோட் படலம் 3.

† இதில் இவ்வாசிரியர் முதலில் வரும் நிரையசையை ஒரு நெட்டெழுத்தாக வெண்ணி 4, 5, 7, 9 ஆகிய வுயிர்களைக் கணக்கெடுக்கின்றார். 3-வது அடியில் ''பூசல்'' ''என்பதில் லகர மெய் யொலிப்பு குறைவதால் ''சல்'' என்பதைச் 'ச' எனக் கணக்கெடுக்கின்றார்போலும்.

சந்த விராட்டுக்கு முதலசை நேரசையால் இது அதற்கு பேதித்து நிரையசை முதலிற் கொண்டது.

மறைது ளங்கினு மதிது ளங்கினும்
வானு மாழ்கடல் வையமு
நிறைது ளங்கினு நிலைது ளங்குற
நிலைமை நின்வயி னிற்குமோ
பிறைது ளங்குவ வினைய பேரெயி
றுடைய பேதையர் பெருமைநின்
இறைது ளக்குறு புருவ மென்சிலை
யிடைது ளக்குற விசையுமோ

இதில் நேரசை முதலாகிய சீர்களுள்ள * மத்த கோகிலத்தில் நிரையசை முதலாகிய சீர்கள் வந்தன.

† மலையே போல்வான் மால்கட லொப்பான் மறமுற்றிக்
கொலையே யொப்பான் கூற்றை நிகர்ப்பான் கொடுமைக்கோர்
நிலையே போல்வா னீர்மையி லாதா னியிர்திங்கட்
கலையே போலுங் காலவெ யிற்றான் கனல்கண்ணான்

நேரசை முதலாகிய மாச்சீர் முதலில் வருமென்ற மத்தமயூரத்தில் நிரையசை முதலாகிய மாச்சீர் முதலில் வந்தவிதன்க.

"பொய்யுரைத் துலகினிற் சினவினுர்
குலமறப் பொருது தனவே
னெய்யுரைத் துறையினிட் டறம்வளர்த்
தொருவனும் நெறியி னின்றான்
மையுரைத் துலவுகண் மனைவிபால்
வரமளித் தவைமறுத்தே
மெய்யுரைத் துயிர்கொடுத் தமரரும்
பெறுகிலா வீடு பெற்றான்"

---

* மத்த கோகிலத்தில் தேமா, கூவிளம், தேமா, கூவிளம், தேமா, கூவிளம் நீண்ட கூவிளமாக இவ்விருத்தத்தில் தேமாக்களுக்கு பதிலாய் புளிமாவைக் காண்கிறோம்.

† கம்பராமாயணம். கிஷ்கிந்தா காண்டம் ஆறு செல்படலம் 2

‡ கம்பராமாயணம் யுத்தகாண்டம் மந்திரப்படலம் 84.

"நெடியிர் கூவிளக் கருவிளச்" என்னும் 5-வது சந்தக் கலித்துறையில், கடையில் எழு மாத்திரையுள்ள விளங்காய்ச்சீரிருக்குமிடத்தில் எழு மாத்திரையுள்ள கனிவந்ததென்க.

எந்தாய் பண்டொரி டங்கர் விழுங்க
முந்தாய் நின்ற முதற்பொரு ளேயென்
றந்தாய் தந்தையி னத்தவ னேக
வந்தா னென்றன்ம னத்தின னென்றான்.

தோதகத்தில் முதற்சீர் கூவிளமாகாது நால் மாத்திரையேயுள்ள தேமா வந்தவிருத்த மென்க.

பூணித் திவையுடை செய்தனை யதனு லுரைபொதுவே
பாணித் ததுபிறி தென்சில பகர்கின் றதுபழியா
ஞணித் தலையிடி கின்றில னனிவர் துலகெவையுங்
காணக் கடிதிர் குத்துதி யென்றான் வினைகடியான்.

அதிகரணீ யென்னும் விருத்தத்துள் புளிமாங்கனி முதலில் வாராது தேமாங்கனி வந்த விருத்தமிது வென்க.

"இத்தன்மை யெய்து மளவின்க ணின்ற
விமையோர்க ளஞ்சி யிதுபோ
யெத்தன்மை யெய்தி முடியுங்கோ லென்று
குலைகின்ற வெல்லை யிதன்வா
யத்தன்மை கண்டு புடைநின்ற வண்ணல்
கலுழன்ற னன்பின் மிசையாற்
சித்தங்க லங்கு மிதுதீர மெள்ள
விருளோடு வந்து தெளிவான்" *

இது நிரையசைக்கு நேரசை முதலில் வந்த மணிமால விருத்தம

* கம்பராமாயணம்—நாகபாசப் படலம் 243.

எழுது குங்குமத் திருவி னேக்துகோ
டுழத மார்பினு னுருகி யுள்ளுறத்
தழுவி நிற்றலுந் தாழ்ந்து தாளுறத்
தொழுது மாருதிக் கினைய சொல்லுவான் *

இது சம்மத விருத்தத்தில் மூன்றாவது இடத்தில் மூன்று மாத்திரைத் தேமா விருக்கவேண்டியதற்குப் பதில் மூன்று மாத்திரைப் புளிமா வந்த விருத்தமென்க.

“ தூணுடை நிரைபுரை கரமவை தொறுமக்
கோணுடை மலைநிகர் சிலையிடை குறையச்
சேணுடை நிகர்கணை சிதறின னுணர்வோ
டேணுடை யுயிர்தொறு முறையுறு மொருவன் ”

இது நேரசைக்கு நிரையசை வந்த தோதகமென்க

“ குஞ்சர மனையார் சிந்தை கொளினையார்
பஞ்சினை யணிவார் பால்வளை தெரிவார்
அஞ்சன மெனவா னம்பக ளிடையே
கஞ்சினை யிடுவார் காண்மலர் புனைவார் ”. †

இதுவும் தோதக விருத்தத்தில் இரண்டாவது கூவிளத்துக்கு புளிமாவந்த விருத்தமென்க.

‡ “ எந்திள முலையாளே யெழுதரு வெழிலாளே
காந்தளின் முகைக்கண்ணிற் கண்டொரு கனிமஞ்ஞை
பாந்தளி தெனவுன்னிக் கவ்விய படிபாராய்
தீந்தள வுகள்செய்யும் சிறுகுறு கைகாணாய் ”

இது “முன்னது கூவிளமாய்” என்னும் விருத்தத்தில் இரண்டாவதும் நான்காவதும் கூவிள்ங்கா யல்லாமல் புளிமாங்காயாகி மாத்திரை பேதமின்றி வந்த விருத்தமென்க.

---

* கம்பராமாயணம் - மருத்து மலைப்படலம். 110.
† கம்பராமாயணம் - கைகேசி சூழ் வினைப்படலம். 64.
‡ கம்பராமாயணம் - பம்பா நதிப்படலம். 38.

"ஆடினு னன்னமா யருமறைகள் பாடினுன்
நீடுநீர் முன்னோனு னெறிமுறையி னேயிதான்
சூடினுன் முனிவர்தந் தொகுதிசேர் சோலைவாய்
மாடுதான் வைகினு னரிகதிரும் வைகினுன் *

இது சிரக்விணிவிருத்தத்தில் கூவிளத்திற்கு கருவிளங்காய் வந்த விருத்த மென்க.

"தன்மிசை மஞ்ஞையி ருந்தக லாபம்வி ரித்தாட
வின்மணி சிந்தரு வித்திர டாழ்ந்து விழுந்தோற்ற
முன்னிய சேடன மஞ்ஞையை யஞ்சிமு ரன்றொல்லை
தன்னுல செய்துவ தன்மைத குங்கயி லாயத்தில்"

இது அஸ்வகதியில் கடைச்சீர் கூவிளங்காயாகாமல், அதுவே மாத்திரையுள்ள தேமாங்காய் வந்த விருத்தமென்க.

"ஆழியென விறைவனடி தொழுதுவரு பவமாம்
ஆழியென யகலுமறி வருளுமென வவனே"

இது வனமயூரத்தில் நேரசைக்கு நிரையசை வந்த விருத்த மென்க.

3. மூன்ருவது இவையல்லாத பிறவற்றையுங்கொள்க. அவை வருமாறு.

"பிறியார் பிறிவே தென்னும்
பெரியோய் தகவே தென்னும்
செறியோ வடியேம் நிலைநீ
நினையா நினைவே தென்னும்
வறியோர் தனமே யென்னும்
தமியென் வலியே யென்னும்
அறிவே வினையோ யென்னும்
அரசே அரசே யென்னும்" †

---

* கம்பரா - அயோத்தியாகா - வனம்புகுபடலம். 9.
† கம்பராமாயணம்-சுக்ரீவர் படலம்-31.

இது நான்கு மாத்திரை மாச்சீர் ஆறு வந்த அறுசீர்ச்சந்த விருத்தம்.

"நீல நின்றதொரு நீல மால்வரைநெ
டுந்த டக்கையினி டந்துநேர்
மேலெ ழுந்தரிவி சும்பு செல்வதொரு
வெம்மை யோடுவர வீசலுஞ்
சூல மந்தகனெ றிந்த தன்னதது
ணிந்து சிந்தவிடை சொல்லுறுங்
கால மொன்றுமறி யாம லம்புதொடு
கல்வி நூனெடிய வில்லினான்."

இது குறிலீற்றுத் தேமாச்சீர் மூன்றும், மூன்றுகுற்றெழுத்து அந்தத்திலுள்ள கூவிளங்காய்ச் சீர் பின்னுமாக மாறிவந்து கடையொருசீரும் கூவிளச்சீராய் முடிந்த எழுசீர்ச் சந்தவிருத்த மென்க.

"நீர்கொண்டுதன் மலர்கொண்டுநன்
னெறிகொண்டுநின் குறிகொண்டுவன்
சீர்கொண்டுவந் தனைசெய்துனைச்
செறிவார்களென் பெறுவார்களோ
பேர்கொண்டிலன் பொறிகொண்டிலன்
பெரியோர்களா லருள்கொண்டிலன்
கார்கொண்டுகண் டருள்சோதியே
நாராயணா நாராயணா."

இது முதற்சீர் நெடிலீற்றுத் தேமாங்கனிச் சீராகவும், மற்ற மூன்றும் நெடிலீற்றுப் புளிமாங்கனிச் சீராகவும் வந்த விருத்த மென்க.

## பன்னிரண்டாம் படலம்

### (ஒழிபியல்)

1. விளமது வருமென விதித்த வீட்டினில்
விளமது கொண்டிலாக் காயும் வேண்டுவார்
விளமது நீண்டது காயின் மேவலு
முளதெனவோர்கவொண் டொடிக்கைத்தையலே

(இ - ள்) விளச்சீர் வருமென்று விதித்த இடத்தில் மாங்காய்ச்சீரையும் வேண்டிப் பாடினர். நெட்டெழுத்திற்று விளச்சீர் காய்ச்சீரிடத்திற் பொருந்தலு முளதென்றறிக - நெட்டெழுத்தென்பது மெய்யடுத்த குறிலன்று (உ - ம்)

"பகவனே யீசன் மாயோன்
பங்கயன் சினனே புத்தன்
பகலோகா ளொருமு கூர்த்தம்
பகலவ னடுவே தேசு
மகரமே சுருப்பூந் தாதாம்
வசிகூர்மை வசியம் வானே
அகமன மனேயே பாவ
மகலிட முள்ளு மாமே*

இது "சீர்வளர்கமலச் செல்வி" என்னும் முதல் அறுச்சீர் விருத்தமாகையால் முதற்சீர், நான்காஞ்சீர் விளச்சீராதல் விதியாயினு மிவ்விதியால், "பகலோகா" "வசிகூர்மை" என மாங்காய்ச்சீர் வரலாயின.

[* குறிப்பு - ஒற்றையடுத்த குறில் இரண்டு மாத்திரைபெறினும், இவ்விதியில் அத்தகைய நெடில் (நீண்ட) விளமாகாதென்பது ஆசிரியர் கருத்து.]

---

* பதினோராவது நிகண்டு.

முன்னாலுந் துணைக்கரத்தோன் முருகவேள்
　　பிடித்தெழுந்து மொய்ம்பிற் றூன
பின்னாலுங் கதிர்ச்சடிலப் பிஞ்ஞான
　　ரடித்தொண்டின் பெருக்க வீறு
பொன்னாலும் பெண்ணாலு மறிவுறித்திவ்
　　வுலகினிடர் பொன்றி யாண்ட
வக்காவலர் பதகமல மகந்தழீஇப்
　　புகழ்ந்திறைஞ்சி யரந்தை தீர்வாம்.

இது "மதிகாறும் வாண்முகம்" என்னுமறுசீர்த்தமிழ் விருத்தமாகையால் முதல் நான்கும் காய்ச்சீராதல் விதியாயினும் "முருகவேள்", "அகந்தழீஇ" எனக்காய் வருமிடத்தில் நெட்டெழுத்தீற்று விளச்சீர் இவ்விதியாலமைந்த தென்க.

"எண்ணிலா வருந்தவத்தோ னியம்பியசொன்
　　மறுமத்தி னெறிவே பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையின் கன்னுழைந்தா
　　லெனச்செவியிற் புகுத லோடும்
உண்ணிலா வியதுயரம் பிடித்துந்த
　　வாருயிர்நின் றூச லாடக்
கண்ணிலான் பெற்றிழந்தா னெனவுழந்தான்
　　கடுந்துயரங் கால வேலான்"

இதில் "எண்ணிலா", "புண்ணிலாம்", "உண்ணிலா", "கண்ணிலான்" எனநெடிலீற்று விளச்சீர் காயிடத்தில் வந்தமை காண்க.

2. கூவிளம் பலவெனக் குறித்த வெல்லையில்
மேவருங் காய்த்தொடர் நேரும் வேண்டுவார்
மாவினைத் தொடர்நிலை யசையும் வைகுழால்
ஓவிய பதமையே யன்ப வொண்டொடீ.

(இ - ள்) பல கூவிளச்சீர்கள் வருமென்று குறித்த இடங்களில் கிடைத்தற்கரிய காய்ப்பின் நேரும் மாச்சீரையடுத்த நிரையசையும் பொருந்தும்.

"வாழி சானகி வாழியி ராகவன்
வாழி நான்மறை வாழிய ரந்தணர்
வாழி நல்லற மென்றுற வாழ்த்தினன்
ஊழி தோறும் புதிதுறு கீர்த்தியான். *

இதில் "தோறும்" என்னும் மாச்சீருக்குப் பின் "புதி" என்னும் நிரையசை வந்து கூவிளத்திற்குச் சமமாயிற்றென்க.

"ஈக்கள் வண்டொடு மொய்ப்பவ ரம்பிகள்
தூக்க மேமிகுந் துட்டொளி யின்றியே
தேக்கெ றிந்து வருதலிற் றீம்புனல்
வாக்கு தேனுகர் மாக்களை மானுமே

இதில் மூன்றாமடி யிரண்டாஞ்சீர் "றிந்து" என்னு மாமுன் "வரு" என்னும் நிறைவந்து விளச்சீரை யொத்தது.

"அருளி லாளெனி னும்மனத் தாசையால்
வெருளு நோய்விடக் கண்ணின் விழுங்கலால்
தெருளி லாவுல கிற்சென்று நின்றவாழ்
பொருளெ லாமவள் பொன்னுரு வாயதே,"

மூன்றாமடியில் "கிற்சென்று" என்று காயும் அதன்பின் 'நின்' என நேரசையும் வந்தமை காண்க.

"கொன்னை கொள்ளக் கொதித்தெழும் பாற்கடல்
பன்ன வெள்ள மெனப்பட ருந்நிலா
வுன்ன வள்ள வுயிரைத் துருவிட
வென்னை வண்ண விடமுமுண் டாக்கொலோ"‡

* கம்பராமாயணம்-சுந்தரகாண்டம்—நிந்தனைப் படலம் 28.
‡ கம்பராமாயணம் மிதிலைக் காட்சிபடலம். 146.

அருத்த நோக்கின ரற்றிரண் மேனியார்
பரித்த காவினர் பப்பர ரேகினார்
திருத்து கூடத்திற் றிண்கலை யத்தொடும்
எருத்தி னேந்திய மால்களி றென்னவே

இவைகளு முதாரணமாமாறு காண்க

இதனால் மாமுன் நிரைக்கு காய்முன் நேர்வருவதுமுள தென்றலைமகின்றது. (உ - ம்)

"கால்கொன கத்தே ருடைசெய்யவன் காய்க டுக்கட்
கோல்மாய் கதிர்புல் லுளைகொல்சினக் கோள ரிம்மா
மேல்பான் மலையிற் புகவீங்கிருள் வேறி ருந்த
மால்யானை யீட்ட மெனவந்து பரந்த தன்றே."

"நொய்தாங் குழவி யெனக்கொள்சில நோன்மை காடின்
வெய்தா மவுணக் குழுவோரினும் வெய்யன் யாரும்
எய்தாத மாய முளனாலிவன் றன்னை வெம்போர்
செய்தா டல்கொள்வ மிவணென்று தெரிந்து சூழ்ந்தார்."

இவற்றுள் "மால்யானை" "யீட்டம்" எனவும், "எய்தாத", "மாயம்" எனவும், ஓர்மா, புளியொடுறுமா என்னும் விதியால் மாமுன்னிரை வேண்டிய இடத்தில காய்முன் சேர்வந்தமை காண்க.

3\. நிரையொடு நேரசை நிற்ற லாகுமென்
றுரையுள விடத்தினி லுடம்பு பின்றொடர்
இருகுறின் மொழியினை யிருத்தி யொன்றைமுன்
னுரைதரு சீரொடும் புணர்ப்ப வுன்னிலார்

(இ - ள்) நிரை யசை யேனும் நேரசையேனும் நிற்றலாகு மென்று மென்று சொல்லிய இடங்களில் இரண்டு குற்றெழுத்தைச் சேர்ந்த ஒரு மெய்யுடைய சொல்லை வைத்து ஒரு குறிலை முன்னைய சீரொடுக் கூட்டமாட்டார்.

நேரும் நிரையு மிரண்டும் வருமாகையால் ஒரு குறிலை முன் சீரோடு கூட்டிப் பின்னேயதை நேராகச் செய்திலரென்க.

"சென்று கருத்தையின்றே தேரினை வருதியென்றான்" இவ் வடியை சென்றுக, ருத்தை, யின்றே எனப் பிரித்தால் சீரிலக்கணம் பொருந்துமேனும், இவ்விதியாற் பிழையாகுமென்க. "சீர்விளமாச்சீர் தேமாச்சீரிணைந்திரட்டு மீங்கே" என்ற விதியால் இவ்விருத்தத்தி னிரண்டாஞ் சீர் புளிமாவாகிலும் தேமாவாகிலும் வரப்பெறுமாகையால், "கருத்தை" என்பதைப் புளிமாவாகக் கொள்ளாமல் ககரத்தை முன் சீரோடு சேர்த்து விளமாக்கி 'ருத்தை' என்று தேமாவாக் கொள்ளார். நிரையசை வருதற்குரிய இடத்தில் நிரையசையுள்ள மொழிவருமெனின், அது நிரையசையாகவே யிருத்தல் வேண்டும். அதை நேரிசையாகச் செய்திலார்.

"வருகபெ ரும்படை யென்று வாக்கினால்" இதுவும் மேற் காட்டிய பிழைபடும் விருத்தமேயாம்.

4. மொழியொடு சீர்வழி முரணு மாகலின்
மொழியது கடைநிகழ் குறிலை முன்னிலா
மொழியொடு முடித்துமெய் யுடைக்குற் றீருயிர்
பிழையற கூறிரண் டாலும் பேணுவார்.

(இ - ள்.) மொழிகள் செல்லும் வழியாகச் சீர்கள் செல்லா வாகலின் மொழிக்குக் கடையிலிருக்கின்ற குற்றெழுத்தைப் பின் மொழியுடனுஞ்சேர்த்து முடித்து இரண்டு குறிலுமதன் பின் ஒரு மெய்யுமுடைய பதத்தையேனும், பதத்தின் முதலசையையேனும் இரண்டு பாகமாக விரும்புவார். (உ - ம்.)

"·· றந்தனாபி றந்தபய னெய்தினர்க ளென்கோ
மறந்தனா யிந்துணர்வு வந்தனர்க ளென்கோ

துறந்தவுயிர் வந்திடைதொ டர்ந்ததுகொ லென்கோ
திறந்தெரிய தென்னைகொலி நன்னுதலி செய்கை'' *

இதை "இறந்தனர்பி" "றந்தபய" எனப் பிரிக்க; "பிறந்த" என்பது இரண்டு கூறானமை காண்க.

"என்றென் றுயிர்விம் மியிருந் தழிவாள்
மின்றுன் னுமருங் கில்விளங் கிழையாள்
என்றென் னுயிருண் டெனினுண் டிடையான்
பொன்றும் பொழுதே புகழ்பூ ணுமெனு"‡

இதில் 'விம்மி' என்பதனீற்று மிகரம் 'யிருந்து' என்னும் வருமொழியோடு சேர்ந்தமை காண்க.

5. வறியா ரெனவல் லொலியோங் கவிலாக்
குறியே யெறியப் படுகொள் கையதே
நெறிவேண் டுழியே நிலையா மதுவே
வறியா ரொருகால் வகையா குவபோல்.

(இ - ள்.) ஏழைகள் போல் நல்ல வொலியில்லாத எழுத்து (சந்தத்தில்) நீக்கப்படும் தன்மையுள்ளது. விதிக்கு வேண்டிய இடத்தில் அவ்வெழுத்தே நிலையாகும்; ஒரு காலத்தில் ஏழைகளும் உபயோகமாகக் கொள்ளப்படுவதைப்போல் (எ - று.)

ஏழைகளை நீக்குவதும் வேண்டுழிக் கொள்வதும் உலகவழக்கமன்றி நீதியல்லாமை போல், வல்லொலியற்ற எழுத்தை நீக்குவதுங் கொள்வதுங் கவிகள் வழக்கமன்றி யொழுங்காகா தென்க.

"நெறி வேண்டுழியே" என்பதை மத்திப தீபமாகக் கொள்க.

* கம்பராமாயணம் உருகாட்டு படலம் 64.
‡ கம்பராமாயணம் உருகாட்டு படலம் 10.

* "நீண்டவிழி நேரிழைதன் மின்னினிற மெல்லாம்
பூண்டதொளிர் பொன்னனைய பொம்மனிற மெய்யே
ஆண்டகைதன் மோதிரம டுத்தபொரு ளெல்லாம்
நீண்டளவில் வேதிகைசெய் தெய்வமணி கொல்லோ"

இதில் "நேரிழைதன்" என்பதில் "ன"கர மெய்யும் 'பூண்ட தொளிர்' என்பதில் ரகரமும், 'ஆண்டகைதன்' என்பதில் னகர மெய்யும், நீண்டளவில்' என்பதில் லகரமெய்யும் நீக்கப்படுவன வென்க. நீக்காவிடின் வனமயூர விதிக்கு விரோதிக்கு மென்க.

6. உயரக் கரமொன் று மிகுந்து குறை இ
இயலுந் திறனு னிதுவோ வெதுவோ
பயிலும் பெயரே பகர்தற் கெதிரென்
றயர்வுற் றிடலக் கவியே யெனலே.

(இ - ள்.) ஒரு மாத்திரை மிகுந்தும் குறைந்தும் வருகை யால் (ஒரு விருத்தத்தின்) பெயர் இதுவாமோ, எதுவாமோ, சொன்னவிதிக்கு விரோதிக்கிற தென்று கவலைப்படாமல் அதுதா னென்று சொல்லுக.

உதாரணம்

† "செய்தா யேனும் தீவினை யோடும் பழியெல்லாம்
எய்தா தெய்தா தெய்தினி ராமன் னுலகின்றான்
வைதா வன்ன வாளிகள் கொண்டென் வழியோடும்
கொய்தா னன்றே கொற்றமு டித்தன் குழுவெல்லாம்."

இதில் மூன்றாமடி இரண்டாஞ் சீராகிய 'அன்ன' என்பது ஒருமாத்திரை குறைந்திருப்பதால் இவ்விருத்தம் மத்தமயூரமோ வேறெதுவோ வென்று சந்தேகிக்காமல் மத்தமயூரமே யென்க.

---

* கம்பராமாயணம்—உருக்காட்டு படலம். 68.

† கம்பராமாயணம்—மாரீசன் வதைப் படலம். 182.

"இணைமுற வென்ன வுள்ள கரணத்தி லொன்ற
தெனலாலி தென்று தெனலால்
மன நீ யல்ல வென்ற வதனாலு முந்து
மதியல்ல வந்த வகையே"

இங்கு 'மனமுநீ', குறிலீற்றுக்கு நெடிலீறு வந்ததேனும் 'அழிவறவாயமீட்டி' என்னும் (எண்சீர்ச் சந்த) விருத்தமாகவே கொள்க.

விருத்தப்பாவியல்

முற்றிற்று.